# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI
7.1.2007 ரூ.8.00
80 பக்கங்கள்



குஷி ஸ்பெஷல்!

நானும் காதலிக்க வேண்டாமா?

# அழகின் பராமரிப்பு

## இயற்கையான வழியில்

அழகு சாதனப் பொருட்கள் என்றாலே நம் கண் முன் நிற்பது, செயற்கையான ரசாயன முறையில் தயாரிக்கப்பட்டவையே.

ஆனால்.... டீம் ஷாப்பி, புத்துணர்வுமிக்க மாற்றத்தை மூலிகை பொருட்களால் தயாரிக்கப்பட்ட அழகு சாதனப் பொருட்களின் மூலம் வழங்குகிறது. அவை சருமத்தின் மென்மை கெடாமல், உயர்ரக குணநலன்களுடன் மேனி அழகை பராமரிக்கின்றன.

## Team Beauty Products

- ALOE CARE MOISTURISING CREAM
- ALOE MULTIPURPOSE GEL
- ALOE CARE FAIRNESS OIL
- ALOE CARE FACIAL GEL

& a wide range of Aloevera based beauty products







**TEAM EUBIO CARE**
(Division of Chemfab Alkalis Limited)

Team Health Shoppe
For Wellness

VANDALUR Team House - GST Rd. Chennai - 48. Ph: 2275 0502

ANNA NAGAR Plot 1200, Z Block, 6th Avenue, Chennai - 40 (Opp. Kokino Karate School). Ph: 4269 3332

ADYAR Shop No.26, Ground Floor, Corp. Shopping Complex III Avenue, Indira Nagar, Chennai - 20. Ph : 4269 5115




For trade enquiries, please contact:
teamhealthshoppe@drraoholdings.com
Team Health Shoppe, Team House,
GST Road, Vandalur, Chennai - 48.

E-mail : teamhealthshoppe@drrabholdings.com | Web : www.teamhealthshoppe.com






# கல்கி

7.1.2007

**தும்புரு**

# பொங்கல் கொண்டாடிய பாவனா!

அரங்கில் நுழைந்த போது கொஞ்சம் பயமாகவே இருந்தது. மத்தியான இருட்டில் ஹோவென்று காலியாய் நாற்காலிகள். மேடையில் கொஞ்சமாக மங்கல் வெளிச்சம். சாஸ்திரத்துக்கு நாலு ரசிகர்கள். ஆனால் பாவனா எதற்கும் பயப் படவில்லை. கண்ணை மூடிக் கொண்டு பேக்டையை இலயித்



* பாவனா (படம் : ஸ்ரீஹரி)



• கிரணாவளி

துப் பாடினார். 'லோகாவன சதுரா' கீர்த்தனையின் பல்லவியில் சங்கதிகளை அவர் நிர்வகித்துப் பாடிய நுனுசில் மினுமினுவென்று அரங்கில் விளக்குகள் பிரகாசித்து இருளை விரட்டின. ஹேமவதி ஆலாபனையில் எழுந்த பனிங்கு சுத்த கார்வைகளைக் கேட்டு காலி நாற்காலிகள்கூட நிமிர்ந்து உட்கார்ந்தன! பாவனா பைரவி பாடிய போதோ அரங்கில் இல்லவே இல்லாத ஏ.ஸி.க்கள் ஜிலுஜிலுவென்று இதமாக இயங்க ஆரம்பித்தன! ஒன்றேகால் மணி நேரகச் சேரியைக் கச்சிதமாக அமைத்துக் கொண்டு மனோதர்மத்தைக் களையாகவும் கல்பித சங்கீதத்தைக் கட்டுப்பாட்டுடனும் அவர் வழங்கியதில் பொங்கலுக்கு வெள்ளையடித்த பொலிவு பால மந்திர் ஜெர்மன் ஹாலில்!

பாவனைகளில்லாத இந்த சங்கீதத்துக்கு வழித்துணையாக வயலினில் கே.பி.நந்தினி; மிருதங்கத்தில் எஸ்.ராஜசுப்ரமணியம். ஆதரித்து வாசித்தனர் இருவரும். குட்டிக் கச்சேரிதானே என்று அலட்சியமாயிராமல் நிஜ தம்பூராவைப் பாடகர் சேர்த்துக் கொண்டது அவரது சிரத்தையின் அடையாளம்.

கீர்த்தனைகளில் மேலும் கொஞ்சம் பாவமும் குரல் வெளிப்பாட்டில் வல்லின மெல்லின சாதுர்யமும் கைவந்தால் பாவனா டபுள் புரமோஷன் பெறுவார். அப்புறம்... பாவம், மத்தியான கச்சேரி அரங்குகள்; அவற்றுக்கு யார் பொலிவூட்டுவார்கள்!

(இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி 18.12.06)

## கிரணாவளியிடம் சில கேள்விகள்!

‘நாதசுதா’ அமைப்பு கச்சேரிக்குத் தேர்ந்தெடுத்தது- வேளச்சேரி அமிர்தம் ஹால் அரங்கத்தை. ‘மாங்கல்யம் தந்துனானே’ மேடை. மிருதங்க வாசிப்பை ‘தம்தம்தனே தம்தம்தனே’ என்று எதிரொலித்த அரங்கமும் ஸ்பீக்கர்களும்! இப்படியொரு சூழலில் கிரணாவளி, பாவம், இருட்டறையில் ஊசியில் நூல் கோக்கும் முயற்சியாகப் பாட ஆரம்பித்தார்- “ஸரஸீருஹா ஸனப்ரியே”... என்று. ஒலியமைப்பு மோசமாயிருந்தால் பாடுவது கஷ்டம்தான். ஆனால் முதல் பாட்டுக்கே மைல் கணக்கில் ஸ்வரம் பாடினால் ரசிகர்களின் கஷ்டம் அதிகரிக்காதா, கிரணாவளி? பூர்வி கல்யாணி, ரீதிகௌளை, சங்கராபாரணம் - ஆலாபனைகள் எல்லாமே ரக்தி ராகங்களில் என்ற போதிலும் துண்டுத் துண்டாக சஞ்சாரங்கள் வெளிப்படலாமா? கார்வைகள் எக்ஸஸ் பாக்கேஜாகிவிடும் என்று அமெரிக்காவில் வைத்துவிட்டு வந்துவிட்டீர்களா, மேடம்? திரவலைக் கொண்டு போய் ஷேர் ஆட்டோவில் கடைசிப் பயணியாய்த் திணித்து ஓட்டுவது என்ன நியாயம் அம்மணி?

அவ்வப்போது சில அபூர்வ பிடிகளுடன் குழைவுகளும் வெளிப்படும் உங்கள் இசை ஏன் பெரும்பாலும் வாத்ய விருந்தாபோல் ஒலிக்கிறது என்று யோசிப்பீர்களா, ப்ளீஸ்?

இக் கச்சேரியில் இனிய ஆச்சர்யம் வினு அவனீசுவரனின் வயலின் ஆதரவு; டபுள் ஆச்சர்யம் ரஜனா சுவாமிநாதன் என்ற சிறுமியின் மிருதங்க வாசிப்பு. ரஜனா, உமையாள்புரம் சிவராமனின் என்.ஆர்.ஐ.சிஷ்யை. அவரைப் போலவே அழகும் நளினமும் ததும்ப வாசிக்கிறார். அவரைப் போலவே அவசியமான இடங்களில் அமைதி காக்கவும் இடைவெளி கொடுக்கவும் பழகிக் கொண்டால் ரஜனா ஆன் லைன் அகாம்பனிஸ்டானாலும் ஆகிவிடுவார்!

(19.12.06)






**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

தலைமை உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்
எம். மோகன், ச. கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

அடுத்த இதழ்... **பொங்கல்**

**ஆரம்பம்...**

**அழகிய 5 புதிய தொடர்கள்...**

# முதல்வன்!

**என்.சொக்கன்** எழுதும்
உலகம் வியக்கும்
**பில் கேட்ஸ்**
சாதனை சரித்திரம்

ஆக்ஷன் ஸ்டார்

**ஜீவா** எழுதும்...

# டிஷ்யூம்!

தன் வெற்றியின் ரகசியத்தை
விவரிக்கும் டானிக் தொடர்!

ஸ்பெஷல்!



பரீட்சையில் சாதனை படைக்க...

+2



மாணவர்களே மாணவர்களுக்கு
வழிகாட்டும் தொடர்



கழனியூரன் எழுதும்

ஜனங்களின் சாமி!



– தெக்கத்திச் சிறு தெய்வங்களின் வரலாற்றுக் கதைகள்



பா.ராகவன் எழுதும்

கொசு!

ஜெட்வேக அரசியல்
தொடர்கதை

# வாரம் ஒரு பட்டுப் புடவை!



| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| து | மு | ட் | அ | அ | க | வெ |
| ப் | ரு | ரு | வ | ல் | ண் | ள் |
| ய் | ங் | ட் | ரை | டை | ஏ | ள |
| கா | கை | பீ | லை | ம் | லா | ரி |
| ற் | பி | ட | ரி | தி | த் | க |
| க | பு | ழை | ஜே | ஸ் | ன் | பீ |
| பா | வா | மு | ள் | ள | ங் | கி |

உங்களுக்கு நன்கு அறிமுகமான சில காய்கறிகளின் பெயர்கள், இங்கே இடமிருந்து வலமாக, வலமிருந்து இடமாக, மேலிருந்து கீழாக, கீழிருந்து மேலாக, குறுக்கும் நெடுக்குமாக இடம் பெற்றுள்ளன. அவற்றைக் கண்டுபிடித்து பொங்கல் குழம்புக்குப் பத்திரப் படுத்துங்கள். பத்து எழுத்துகள் மிஞ்சும். கலைந்துள்ள அவற்றை ஒழுங்குபடுத்தினால் அனைவருக்கும் பிடித்த, பிரபலமான ஒருவரின் பெயர் கிடைக்கும். அதனை எங்களுக்கு எழுதியனுப்புங்கள்; சென்னை, தி.நகர் பாலம் சில்க் ஸாரீஸ் வழங்கும் ரூ.2,500 மதிப்புள்ள பட்டுப் புடைவையைப் பரிசாகப் பெறுங்கள். ஒன்றுக்கு மேற்பட்டோர் சரியான விடை எழுதினால், பரிசுக் குரியவர் குலுக்கல் மூலம் தேர்ந்தெடுக்கப்படுவார். ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.

கடைசி தேதி : 8.1.2007.

கூப்பனைப் பயன்படுத்தவும்.






வாரம் ஒரு பட்டுப் புடைவை - 1
கல்கி,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032



சிறந்த சிந்தனையாளர்
நகைச்சுவை மன்னர்
அரசியல் விமர்சகர்

திரு.**சோ** அவர்களை

ஆசிரியராகக் கொண்ட

# துக்ளக்



வார இதழை
விநியோகம்
செய்வதில்
**கல்கி** நிறுவனம்
பெருமையடைகிறது.




**10.01.2007 இதழ் முதல்**
**பிரதி ஒன்றின் விலை ரூ.7/-**

**கல்கி, மங்கையர் மலர் விற்பனையாளர் அனைவரிடமும் ஒவ்வொரு வாரமும் வியாழக்கிழமை அன்று கிடைக்கும்.**

***சந்தா விவரம் :***

உள்நாடு : **ஒரு வருடம் : ரூ.390.00**

வெளிநாடுகள் (விமானத் தபால்) : **ஒரு வருடம் : 45 யு.எஸ். டாலர்**

சந்தா தொகையை தங்கள் முழு விலாசத்துடன் **பரதன் பப்ளிகேஷன்ஸ் பி. லிட்** என்ற பெயரில் **at par cheque** அல்லது **DD** மூலம் பின்வரும் முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.

**சர்க்குலேஷன் மேனேஜர், பரதன் பப்ளிகேஷன்ஸ்,**
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.

# தராசு

● இரா.சக்கரபாணி, மதுரை - 7

**? டாடா நிறுவனம் கார் தொழிற்சாலை தொடங்குவதை எதிர்த்து மம்தா பானர்ஜி உண்ணாவிரதம் இருக்கிறாரே?**

! விளை நிலங்களில் தொழிலகங்கள் கூடாது என்று ஒரு பக்கம் மம்தாவின் பிடிவாதம்; மறுபக்கம், மே.வங்க முதலமைச்சர் "எதிர்கட்சிகளைக் கலந்தாலோசித்த பிறகே முடிவு எடுக்கப்பட்டது; கொடுத்த வாக்குறுதியை மீற முடியாது" என உறுதியாக இருப்பது. இதற்கிடையே டாடா தாமே முன்வந்து "வங்கத்தை விடமாட்டேன்; ஆனால் வேறு இடம் பார்ப்போம்" என்று சொன்னாரானால் அவருடைய கௌரவம் உயரும்.

● சு.ஜெயபாலன், மதுரை - 4

**? ஜக்மோஹன் டால்மியா ஆயுட்காலத்துக்கும் கிரிக்கெட் போர்டிலிருந்து நீக்கப்பட்டுள்ளதைப் பற்றி...?**

! க்ளீன் போல்ட்!

● ஆர்.லதா, தேவூர்

**? மத்திய அமைச்சர் பதவியானது 'கால் தூசுக்குச் சமம்' என்கிறாரே செஞ்சி ராமச்சந்திரன்?**

! ரொம்ப தவறான கருத்து. மத்திய அமைச்சர் பதவி மக்களுக்குத் தொண்டு செய்வதற்கான அரிய வாய்ப்பு - எனவே அது விலைமதிக்க முடியாதது. சுயநலத்துக்காக அப்பதவியில் அமர்பவர்தான் அதைக் கால் தூசுக்குச் சமமாக எண்ண முடியும்.

● எச்.ஆன்டனி தமிழரசன், மும்பை-17

**? பள்ளிகளில் சுகாதாரத்தைக் கட்டாயப் பாடமாக்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருவதாக அமைச்சர் அன்புமணி சொல்கிறாரே?**

! ரொம்ப நல்ல காரியம். ஆனால், அதற்கு முன்னதாக பள்ளிகளில் சுகாதாரம் நிலவச் செய்வது ரொம்ப அவசியம்.

● கே.ராமசேஷன்,
கல்பகனூர் அஞ்சல் ❐

**? நீதிபதிகள் மீதான புகார்களை விசாரிக்க தனிப்பட்ட கமிஷன் ஒன்று அமைப்பதற்கு லோக் சபாவில் மசோதா தாக்கலாகியுள்ளதைக் குறித்து...?**

! இதை ஏற்கத் தயார் என்று உச்சநீதிமன்ற தலைமை நீதிபதி பாலகிருஷ்ணன் சொன்னதன் மூலம் சர்ச்சை அடங்கிவிட்டது. இதே பெருந்தன்மை நமது எம்.பி.க்களிடம் இல்லையே! குதிரை 'கொள்ளு' என்றால் வாயைத் திறந்து, கடிவாளம் என்றால் இறுக்கி மூடிக் கொள்வதைப் போல் அல்லவா நடந்து கொள்கிறார்கள்.

● அ.அப்துல் காதர், விளாத்திகுளம்

**? "வீட்டிலே அடைந்து கிடக்கும் பெண்களுக்கு ஜன்னலாக விளங்குவது சின்னத்திரை" என்று ராதிகா சரத்குமார் கூறியிருப்பதைப் பற்றி...?**

! அய்யே! அது தெரிந்துமா ஜன்னல் வழியே அழுகிய தக்காளியும், வாழைப் பழத் தோலும் எறிகிறார்கள் சீரியல் தயாரிப்பாளர்கள்!

● ஜி.ஞானாம்பாள், மதுரை - 11 ●

**? இந்த மார்கழி சீசனில் யார் பாட்டு டாப்?**



• ஜன்னல் பார்வை!

❐ ரூ.100/- பரிசு பெறுபவர்:

கே.ராமசேஷன்,
கொத்தாம்பாடி,
கல்பகனூர் அஞ்சல் - 636 109

! டாப்புக்குப் போட்டியிடும் பல்வேறு கச்சேரிகளையும் கேட்டு, ஒவ்வொன்றிலும் உள்ள தனித்தன்மை, சிறப்பம்சங்களை உள்வாங்கிக் கொண்டு மகிழ்ச்சியில் ஆழ்ந்து போகும் ரசிகன்தான் டாப்!

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

? திரைப்பட டிக்கெட் கட்டணத்தைத் தமிழக அரசு குறைத்துள்ளதைக் குறித்து..?

! நல்ல காரியம்; எதிர்ப்பு இருக்கத்தான் செய்யும். உறுதியாக அமலாக்க வேண்டும். திரைத்துறையில் பொருளாதார வீக்கம் பல அம்சங்களில் ரொம்ப அதிகம். கட்டணக் கட்டுப்பாடு அதைக் குறைக்கும். ஆனால், அந்தத் துறையிலும் அடிமட்ட ஊழியர்களுக்கு உரிய ஊதியம் கிடைப்பதில்லை. அதற்கு ஏதாவது வழி செய்தால் நல்லது. திருட்டு வி.சி.டி. உற்பத்தியும் விநியோகமும் குறையும் என்பது மற்றொரு ப்ளஸ்.

● லெ.நா.சிவகுமார், சென்னை-33

? "பலமுறை கேட்டும் கிடைக்காததால், ஆட்சியில் பங்கு வேண்டும் என்று காங்கிரஸார் இனி கேட்பது நல்லதல்ல" என்கிறாரே இளங்கோவன்?

! அவருக்கென்ன, மத்திய அமைச்சர் பதவியில் உட்கார்ந்து கொண்டு தாராளமாக மற்றவர்களுக்கு உபதேசிக்கலாம். ஆனால், கூட்டணி வெற்றிக்குப் பாடுபட்ட தமிழக காங்கிரஸுக்கு மட்டுமின்றி வாக்காளருக்கே தி.மு.க. மைனாரிட்டி அரசு ஓர் அநீதியை இழைத்துள்ளது என்பதில் சந்தேகமில்லை. கருணாநிதியின் நெஞ்சுக்கு மட்டுமே நீதி கிடைத்துள்ளது, இந்த விஷயத்தில்.

● ஏ.மோகனசுவாமி, கொளத்தூர்

? ஒரு பெண்மணி குடியரசுத் தலைவராக வரவேண்டும் என கலாம் விரும்புகிறாரே... அது நிறைவேறுமா?

! நிறைவேற வாய்ப்பில்லை என்று சொல்ல காரணம் ஏதும் புலனாகவில்லை. ஆனால், அடுத்த குடியரசுத் தலைவர் கோபாலகிருஷ்ணா காந்தி என்கிற செய்தி காற்றுவாக்கில் அடிபடுவதன் காரணமாக, கலாமின் கனவு 2020-ல் பலிக்கலாம்.



• வறட்டுப்.....



• ...பிடிவாதம்... • ...தளருமா...?



• தாராள உபதேசம்!

# மத்திய அமைச்சர் பதவி கால் தூசா?

## நீங்கள் கேட்டவை

> ★ ரூ.50/- பரிசு பெறுபவர்:
> ஜி.ஞானாம்பாள்,
> 5/1, ஜீவா நகர் 2ஆவது தெரு,
> தபாலாபீஸ் எதிரில் மாடி வீடு,
> ஜெய்ஹிந்த்புரம், மதுரை-625 011





# சுதா சேஷய்யன் 16

அடுத்த திருநாமம் சிவா. சிவ என்று சொன்னால் அது பரமேசுவரனைக் குறிக்கக்கூடியது. சிவா என்றால் அது அம்பாளைக் குறிக்கக்கூடியது. அம்பாள் எப்படிப்பட்டவள் என்பதற்கு இன்னொரு விளக்கம் உண்டு.

பரமேசுவரனுக்கு வைத்தியநாதன் என்றொரு திருநாமம். எந்தவிதமான நோயையும் தீர்க்கக்கூடியவர் - பவரோகத்தை - அதாவது பிறவிப் பிணியைத் தீர்க்கக்கூடியவர். அதனால் வைத்தியநாதராக இருக்கக்கூடியவர். உலகத்திலே எந்த நோயாக இருந்தாலும் சரி, இந்த விஸ்வத்தில் உள்ள துயரம், துன்பம், கோளாறு அனைத்துக்கும் ஔஷதமாக இருக்கக்கூடியவர். ஒருவேளை அவருக்கே ஏதாவது நோய் வந்தால்...?

## ஈசனுக்கு நோய் வருமா?

பகவானுக்கே நோய் வருமா என்று கேட்கக்கூடாது. நமது நாட்டு மகான்களெல்லாம் எப்படி அன்பு வைத்தார்கள் என்றால், "ஐயோ! சுவாமிக்குக் கால் வலிக்குமே!" என்று பதறினார்கள். சுவாமிக்குக் கால் வலிக்குமா என்று கேட்டால் அது அறிவு; சுவாமிக்குக் கால் வலிக்குமே என்று கவலைப்பட்டால் அது அன்பு. சுவாமியிடம் அறிவு வேலை செய்யக்கூடாது. எல்லா இடங்களிலும் அறிவு வேலை செய்யக்கூடாது. பகவானிடம் போய் 'எனக்கு அறிவு ஜாஸ்தி' என்று நினைத்தால் 'நஹி நஹி ரக்ஷதி டுக்ரிங் கரணே' தான்! அந்த இடத்திலே அந்த அறிவு காப்பாற்றாது!

அப்படியானால் பகவானிடம் வேலை செய்ய வேண்டியது 'அவனுக்குக் கால் வலிக்குமே' என்று கவலைப்படக்கூடிய பக்தி. இது அஞ்ஞானம்தான். ஆனால், இந்த அஞ்ஞானத்தில் இருக்கக்கூடியது உயர்ந்த பக்தி.

## ஈசனுக்கு ஔஷதம்!

அப்படியானால் வைத்தியநாதருக்கே ஏதேனும் உடம்புக்கு ஏற்பட்டால் அவனுக்கே ஔஷதமாக இருக்கக்கூடியவர் யாரென்று கேட்டால், சிவாவாக இருக்கக்கூடிய சாக்ஷாத் அம்பாள் பரமேசுவரி.

இதையேதான் பகவத்பாதர் வேறு விதமாக விவரித்தார்:

அம்பாளுடைய ஸ்வரூபத்தை அவர் வர்ணித்துக் கொண்டே வரும்போது, அம்பாள் 'ஒரு காதில் சூரியனை அணிந்து கொண்டிருக்கிறாள். இன்னொரு காதில் உடமண்டலா என்கிற சந்திரனை அணிந்து கொண்டிருக்கிறாள்' என்கிறார்.

இன்னொருவிதமான வர்ணனையும் உண்டு - அம்பாளுடைய கண்களில் ஒன்று சூரியன், இன்னொன்று சந்திரன் - அதே அம்பாள் ஒரு காதில் சூரியனையும் இன்னொரு காதில் சந்திரனையும் அணிந்து கொண்டிருக்கிறாள் என்பதாகவும் ஒரு வர்ணனை உண்டு. இந்த வர்ணனையினால்தான், அபிராமி பட்டருக்குச் சொன்ன நாளில் முழு நிலவு வரவேண்டும் என்பதற்காக தன்னுடைய காதுகளில் இருந்த தாடங்கத்தைக் கழற்றிப் போட்டாள் - காதிலிருந்த சந்திரனை அவள் போட்டதும் அது வானத்துச் சந்திரனாகப் போய் நின்றது என்று அபிராமி பட்டர் சரித்திரத்தைச் சொல்லும்போது சொல்லுவார்கள்.

சாதாரணமாகப் பார்க்கிறபோது அம்

ஸ்ரீ லலிதா

# நஞ்சை அமுதாக்கிய கன்னிகை!

பாள் தன் திருக்காதுகளில் தோடு அல்லது தாடங்கம் அணிந்து கொண்டிருப்பதைப் போல்தான் இருக்கும். ஆனால் அந்தத் தாடங்கத்துக்கு என்ன மகிமை என்பதை ஆசார்யர் பாடுகிறார்.

## நீலகண்டன்

சிவானந்த லஹரி பாடுகிறபோது, சிவபெருமானிடம் போய் ஒரு கேள்வி கேட்டார் ஆசார்யர். "கழுத்திலே என்னவோ கறை மாதிரி இருக்கிறதே, கரு நீலமாக! நீலகண்டன் என்று உமக்குப் பெயரும் வைத்துள்ளோமே அதைப் பார்த்துவிட்டு, எனக்கொரு சந்தேகம்" என்றார்.

பரமேசுவரனிடம் உரிமையோடு கேள்வி எழுப்பி சண்டை போடக்கூடிய நிலைமை ஆசார்யருக்கு இருந்தது. ஏனென்றால், பரமேசுவரனுக்கு ரொம்ப ப்ரீதியான குழந்தை என்பதனாலே ஆசார்யர் அதைக் கேட்க முடியும். அவர் கேட்டார்:

"பாற்கடலைக் கடைந்தபோது ஆலகால விஷம் அப்படியே புறப்பட்டு வந்தது. எல்லாரும் அந்த விஷத்தைப் பார்த்துப் பயந்து ஓடினார்கள். - அதுவரையிலும் சண்டை போட்ட தேவர்களும் அசுரர்களும் ஓடினார்கள்..."

ஆசார்யர் கேட்கிறார்: "இதென்ன ஆச்சர்யம்...? ஆலகால விஷத்தின் காற்று பட்டாலே விஷம். ஆனால், அது உங்களுக்கு முன்னால் வந்தபோது, அதை அப்படியே எடுத்துச் சாப்பிட்டீர்களாமே - ஓர் உருட்டு உருட்டிச் சாப்பிட்டீர்களாமே, அது என்ன குளிகையா?" என்று.

அதற்கு அடுத்ததாக இன்னொரு சந்தேகம் வருகிறது... விஷம்தானே- உள்ளே போனாலும் விஷம்தானே, கழுத்தில் நின்றாலும் அது விஷம்தானே...?

நாம் என்ன கதை சொல்கிறோம்...? 'ஆலகால விஷத்தை விழுங்கினார் பரமேசுவரன். அது உள்ளே போய்விடக்கூடாது. போனால் பகவானுக்குள்ளே இருக்கக் கூடிய அண்ட சராசரங்களையும் அது அழித்துவிடும் என்பதனாலே அம்பாள் அப்படியே பக்கத்திலிருந்து கழுத்தைப் பிடித்தாள். பிடித்தவுடனே விஷம் அங்கேயே தங்கிப் போயிற்று; அதனால் நீலகண்டனாக - ஸ்ரீ கண்டனாக மாறினார் என்கிறோம்.

## தாடங்க மகிமை!

இப்போது கேள்வி என்னவென்றால், "இப்படிக் கழுத்திலே இருக்கிற விஷம் எவ்வளவு நாட்களாக இருக்கிறது? நாலு வருஷமாக இருக்கிறதா? நாற்பது வருஷமாக இருக்கிறதா? நாலாயிரம் வருஷமாக



இருக்கிறதா?" என்று கேட்டால் பதில் எப்படிச் சொல்வது?

இது என்றைக்கு நடந்தது என்றே தெரியாது. எங்களுடைய சிந்தனைக்கும் கற்பனைக்கும் அப்பாற்பட்ட காலத்திலிருந்து அங்குதானே இருக்கிறது!

விஷத்தை இப்படி வைத்திருந்தால், ஆபத்து வராதா?

இப்படிக் கழுத்தில் இருக்கக்கூடிய விஷத்தினால் எங்கள் ஈசனுக்கு எந்தக் கோளாறும் வரவில்லை. அது ஏன் என்று காரணம் விளக்குகிறார் ஆசார்யர்:

"எங்கள் அம்மாவுடைய தாடங்க பாக்கியம்; அதனால்தான் விஷம் இறங்கி வரவில்லை" என்றார். *தவஜனனி தாடங்க மஹிமா!*

அம்மாவுடைய தாலி பாக்கியம் என்று சொல்கிற மாதிரி தாடங்க பாக்கியம்

என்கிறார் ஆதி சங்கரர்.

இதையே இன்னும் கொஞ்சம் விஸ்தரித்துப் பார்க்கிறார் அபிராமி பட்டர். "அவர் சாப்பிட்டபோது அது ஆலகால விஷம்தான். கழுத்திலே நின்றபோதும் ஆலகால விஷம்தான். ஆனால் எங்கள் **அம்மா** தன் கையைக் கொண்டு போய் அவர் கண்டத்தில் வைத்தவுடனேயே அந்த விஷம் அமுதமாக மாறிப் போயிற்று! அமுதமாக மாறிய பிறகு அதனால் என்ன கேடு வர முடியும்!

**வா**ர் சடையோன் அருந்திய நஞ்சு அமுதாக்கிய கன்னிகையே என்று பாடுகிறார் அபிராமிபட்டர். எங்கள் தாய் செய்த அந்தப் பராக்கிரமம் அவ்வளவு உயர்வானது. அந்தத் தாயாக இருக்கக் கூடியவள் சிவகாமேசுவரியாக சிவகாமேசுவரருடைய திருத்தொடையில் அமர்ந்துகொண்டிருக்கக் கூடியவள் - தன்னுடைய திருக்காதுகளில் சூரியனையும் சந்திரனையும் தாடங்கங்களாக அணிந்துகொண்டிருக்கிறாள்.

## ஆணையிடும் சக்தி!

'**சி**வா'வாக இருக்கக்கூடியவளே சுவாதீன வல்லபாவாக இருக்கக் கூடியவள்.



சுவாதீன வல்லபா என்றால், அந்த சிவ காமேசுவரரையே தனக்கு சுவாதீனமாக வைத்திருக்கக்கூடியவள். சிவகாமேசுவரராக இருக்கக்கூடியவர், அம்பாள் சொன்னால் எதையும் செய்வாராம். அதனால்தான் புழக்கத்தில் ஒன்று சொல்வோம் - சக்தி இல்லை என்றால் 'சிவனே' என்று கிடக்க வேண்டும் என்போம். இதனால் சிவனுக்கும் சக்திக்கும் போட்டி என்று பொருளில்லை! சிவசக்தி இரண்டையும் ஐக்கியமாகப் பார்ப்பது தான் இந்த மரபு. போட்டி கிடையாது!

அதனால்தான் கடைசியில் ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமத்தை எப்படிக் கொண்டு போய் முடிப்பார்கள் என்றால் சிவ-சக்தி ஐக்கிய ஸ்வரூபிணியாக இருக்கக் கூடியவள் என்று முடிப்பார்கள்.

சிவம் என்பதற்கும் சக்தி என்பதற்கும் என்ன பொருள்? அந்த வார்த்தைகளுக்கு என்ன பொருள்? அந்த வார்த்தைகளிலிருந்து நாம் வேறு என்ன பொருளைப் புரிந்து கொள்ள வேண்டும்?

பின்னால் இன்னொரு திருநாமம் வரும் **ஸ்ரீமன் நகரநாயிகா** - ஸ்ரீமன் நகரத்தில் இருக்கக்கூடியவள், சிந்தாமணி கிரஹத்தில் இருக்கக்கூடியவள் என்று சொல்லி; அதற்கப்புறம் ஒன்று வரும்: பஞ்ச பிரம்மாஸனத்தில் அமர்ந்திருக்கக் கூடியவள் - **பஞ்ச பிரம்மாஸன ஸ்திதயா** - பின்னால் பஞ்ச பிரேதத்தில் அமர்ந்திருக்கக்கூடியவள் என்றும் பொருள்பட ஒரு திருநாமம் வரும்.

இந்தப் பஞ்சபிரம்மாஸனம் என்றால் என்ன, பஞ்சபிரேதஸ் என்றால் என்ன, சிவம் என்றால் என்ன என்பதையெல்லாம் நாம் மிகச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லையென்றால், இந்தத் திருநாமங்களைச் சரியாக உணர முடியாமல் போகும்.

இது சாதாரணமாக ஸ்ரீ வித்யா உபாஸனை செய்கிறவர்களுக்குத் தெரிந்த விஷயம். சாக்தத்தில் (சக்தி வழிபாட்டில்) அமைந்துள்ள விஷயம்.

சிவம் என்றால் நாம் சிவபெருமான் என்று நினைக்கிறோம்.

சிவபெருமான் என்றால் என்ன வடிவம்?

(தொடரும்)



# கல்கி



2007 ஜனவரி 7
விய மார்கழி 23
மலர் : 65
இதழ் : 23

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## பணம் என்னும் பூதம்!

**கி**றிஸ்துமஸ் பண்டிகையை, கொண்டாட்டத்துக்கான நேரமாக மட்டுமே கொள்ளாமல் ஆத்ம சிந்தனைக்கான காலமாகக் கருதி பேசியிருக்கிறார் போப் ஆண்டவர்.

'விண் ஆராய்ச்சியில் சிறகடித்துப் பறந்த மனிதன் இன்று உயிரியலின் ரகசியத்தை டி.என்.ஏ. ஆராய்ச்சிகள் மூலம் விண்டறிந்துவிட்டான். ஆனால் அத்தனை முன்னேற்றமும் அவனிடம் மனித நேயத்தை அதிகரிப்பதற்குப் பதிலாக சுய நலத்தையே வளர்த்து வருகிறது. விஞ்ஞான - தொழில் நுட்பத்தை வழிபட்டு அதற்கு அடிமைப்பட்டுக் கிடக்கும் மனிதனை மீட்டெடுக்க மீண்டும் ஓர் அவதார புருஷர்தான் வரவேண்டும்' என்பதுதான் போப் பெனடிக்ட் XVI பேசியதன் சுருக்கம். சகிப்புத் தன்மை தொலைந்து வருவதையும் பயங்கரவாதம் பெருகி வருவதையும் பசியும் பிணியும் மலிந்து வருவதையும் அவர் சுட்டிக் காட்டியிருக்கிறார். ஏழைகளும் குழந்தைகள் பலரும் ஒடுக்கப் பட்ட பிரிவினரும் உலகெங்கும் பாதுகாப்பின்றி அச்சுறுத்தப்படுவதும் துன்புறுத்தப்படுவதும் அதிகார துஷ்பிரயோகத்தாலும் ஆதிக்க உணர்வாலும் நிகழ்பவை என்று எச்சரித்துமிருக்கிறார்.

போப் ஆண்டவர் பட்டியலிடாத மற்றும் ஓர் அபாயமும் இருக்கிறது. அதுதான் பணத்தின் ஆதிக்கம். இந்த ஆதிக்கத்துக்கு அடிமைப்பட்டுப் போய்தான் மனித நேயம், பண்பாடு, எளிமை, தன் நிறைவுக் கோட்பாடு என்பன போன்ற வாழ்வுக்கு நிம்மதியும் அர்த்தமும் சேர்க்கும் விடியல்கள் கைவிடப்பட்டு வருகின்றன. கம்யூனிஸ நாடுகள்கூட பணத்துக்காகக் கோட்பாடுகளைக் கைவிட்டுவிட்டன.

தாராளமயமாக்கல், உலகமயமாக்கல் என்ற பெயரில் ஏற்பட்டுள்ள பணம் சம்பாதிக்கும் போட்டியில், மனிதன்




பணத்துக்கு அடிமையாகவே ஆகிவிடுகிறான்.

நமது நாட்டையே எடுத்துக் கொள்வோம். உலகமயமாக்கலின் விளைவாக கிடுகிடுவென்று அயல்நாட்டு நிறுவனங்கள் நமது தொழில் பிரிவில் மட்டுமின்றி பங்குச் சந்தையிலும் நுழைந்துவிட்டன. இந்நிறுவனங்கள் நம்மையும் நம் தேசத்தையும் வளத்தையும் படிப்படியாக விலைக்கு வாங்கிவிடும். வேறு வழியின்றி அந்நாட்டு நிறுவனங்களிடம் நமது பொருளாதாரம் சரணடைய வேண்டிய கட்டாயம் ஏற்படும்.

இப்போதே நாம் அதற்கான அறிகுறிகளைக் காண்கிறோம். அன்னிய முதலீட்டாளர்கள் புகுந்துள்ள ஒரு சில துறைகளைச் சார்ந்தவர்களும் அவற்றின் பணியாளர்களும் வேகவேகமாக வளர்ச்சியுற்றுவர, இந்த நாட்டின் ஏழைகள் மட்டும் இன்னமும் பரம ஏழைகளாகிறார்கள். வளம் கொழிக்கும் தீவுகளைச் சுற்றி வறுமைக் கடல் ஆர்ப்பரிக்கிறது. விலைவாசி குறைந்துவிட்டதாக அரசும் அமைச்சர்களும் சத்தியம் செய்தாலும் ஏழைகள் வயிறு கழுவுவது மேலும் மேலும் கடினமாகிக் கொண்டுதான் வருகிறது. உணவு உற்பத்தியில் தன்னிறைவு என்பது பழங்கதையாகி உணவு தானியங்களை இறக்குமதி செய்கிறோம்! போதாக்குறைக்கு, தொழில்நுட்ப வளர்ச்சியானாலும் சரி, தொழிலகங்கள் உருவாக்கமானாலும் சரி, ஏழை எளியவர்களின் இருப்பிடமும் விவசாய நிலங்களும்தான் கையகப்படுத்தப்படுகின்றன. கல்வியின்மை அவர்களை மேலும் பலவீனப்படுத்துகிறது.

வளர்ச்சி, கொள்கை, குறியீடுகள், திட்டங்கள் - எல்லாமே எந்த நாட்டுக்கும் தேவை தான். ஆனால் அவை மக்களை மையப்படுத்தித்தான் படிப்படியாக மலரவேண்டுமேயொழிய பணத்தை மையப்படுத்தி அல்ல. இந்தியா நூறு கோடி சம்பாதித்தது என்பதைக் காட்டிலும் இங்கே நூறு கோடி மக்களும் நிம்மதி இழக்காமல் வாழ்கின்றனர் என்ற நற்பெயர்தானே முக்கியம்! இதைத்தான் காந்திஜி சுதேசி கொள்கை மூலமும் கிராமங்களை மையப் படுத்திய தன்னிறைவுத் திட்டங்கள் மூலமும் உணர்த்த முயன்றார்.

ஆனால், இன்று நாம் அந்த உயர்நோக்குகளைத் தொலைத்ததோடல்லாமல், காந்திஜி பேரில் என்ன குற்றம் சாட்டிக் கேவலப்படுத்தலாம் என்று ஆராய்ந்துகொண்டிருக்கிறோம் என்பதுதான் வேதனையிலும் வேதனை! ●



**சத்ய சாயி**





# அமைதிக்கு ஒரு யாகம்!

**சி**வன் அபிஷேகப் பிரியர் என்பது தெரிந்த விஷயம். ஆனால் பாலாலும், நெய்யாலும், பஞ்சாமிர்தத்தாலும் செய்யும் அபிஷேகங்கள் அவரவர் செல்வச் செழிப்பையே காட்டும். அவரை சமகம் மற்றும் ருத்ரத்தால் (மந்திரம்) அபிஷேகிக்க வேண்டும். ருத்ரமும் சமகமும் வேத இலக்கியத்தில் மிக முக்கிய இடத்தைப் பிடித்துள்ளன. கிருஷ்ண யஜுர் வேதத்தின் இருதயமாக இவை உள்ளன. தைத்ரிய சம்ஹிதை என்ற நூலில் ருத்ரம் மற்றும் சமகத்தைப் பற்றிச் சொல்லப்பட்டுள்ளது.

ஸ்ரீருத்ரம் என்பது நமது முன்னோர்களால் தொகுக்கப்பட்ட ஐந்து தியான வகைகளில் ஒன்று. உபநிஷதம், பகவத் கீதை, விஷ்ணு சஹஸ்ரநாமம், புருஷ ஸுக்தம் ஆகிய தியான நூல்களின் வரிசையில் ருத்ரமும் வருகிறது. ஆனால் இவற்றில் எல்லாம் தலையாயது ருத்ரம் தான். ருத்ர ஜபத்தை எல்லா தேவர்களும் விரும்புகிறார்கள்.

ருத்ராபிஷேகத்தை நான்கு வகைகளாகப் பிரிப்பார்கள். அவை ருத்ரம், ருத்ரைஹாதசினி, மகாருத்ரம், அதிருத்ரம் ஆகியவை.

அதிருத்ரம் என்பது 121 புரோகிதர்கள் 11 முறை தொடர்ச்சியாக 11 நாட்கள், 14641 நாமாக்களையும், 1331 சமகங்களையும் சொல்வதாகும். இவ்வாறு மந்திரங்களைச் சொல்வதுடன் பாராயணம், அபிஷேகம் ஆகியவையும் அதிருத்ர மகாயாகத்தின்போது செய்யப்படும்.

தமிழ்நாடு சாய் இளைஞர்கள் ஏற்பாட்டில் சென்னையில் அதிருத்ர மகா யக்ஞம் வருகிற ஜனவரி 19 முதல் 30ஆம் தேதி வரை நடக்கவிருக்கிறது. திருவான்மியூர் வாசுதேவன் நகரில் ராமச்சந்திரா மருத்துவக்கல்லூரி திடலில் அறுபதாயிரம் சதுர அடி பரப்பளவில் அமைக்கப்படும் யாக சாலையில் நடைபெறும் இந்நிகழ்ச்சியில் சத்யசாயிபாபா கலந்து கொள்கிறார். பெங்களூரு கிறிஸ்து கல்லூரி முன்னாள் பேராசிரியர் நஞ்சுண்ட தீக்ஷிதர் தலைமையில் யாகம் நடக்கிறது. இவர்தான் புட்டபர்த்தியிலும் யாகத்தை நடத்தினார். புட்ட பர்த்தியில் யாகம் முடிந்ததும் சத்யசாய்பாபா இவருக்குத் தரிசனம் தந்து இரண்டு தங்கச் சங்கிலிகளையும் பரிசாக அளித்தார். இதை அவர் பெருமையுடன் நினைவு கூர்கிறார்.

**- பாலசக்தி**

# கருணை மழை பொழியுங்கள்!



அருள் உள்ளம் கொண்ட அன்பர்களே!

வணக்கம். மிகவும் எளிய குடும்பத்தைச் சேர்ந்த எனக்கு இறைவன் பெரிய சோதனையை கொடுத்துவிட்டான். எனக்கு இரண்டு பெண் குழந்தைகள் உள்ளனர். அவர்களுள் **மூன்று** வயதுடைய இளைய மகளான **நர்கீஸ் பாத்திமா** பிறவியிலேயே உட்செவி அமைப்பு இல்லாமல் பிறந்திருக்கிறாள். இதனால் காது கேட்க இயலாமல் போனது. அதன் காரணமாகப் பேசவும் முடியவில்லை. காது, மூக்கு, தொண்டை, மருத்துவர் **பத்மஸ்ரீ மோகன் காமேஷ்வரன்** அவர்கள் என் மகளை பரிசோதித்துவிட்டு காக்லியர் இம்பிளான்டேசன் அறுவை சிகிச்சை செய்தால் எல்லோரையும் போல கேட்கவும். பேசவும் முடியும் என கூறியுள்ளார். ஆஸ்திரேலியாவில் இருந்து தருவிக்கப்பட்டுத் தலையினுள் பொருத்த வேண்டிய **உட்செவி கருவி மட்டுமே ரூ.9,48,000/- மதிப்பு வாய்ந்தது. அறுவை சிகிச்சை கட்டணம் உட்பட ரூ.10,50,600 (பத்து இலட்சத்து ஐம்பதாயிரத்து அறுநூறு)** ஆகும் என மருத்துவமனையால் கணக்கிடப்பட்டு சான்றிதழ் வழங்கப்பட்டுள்ளது. எளிய வாழ்க்கை நடத்தி வரும் என்னால் இவ்வளவு பெருந்தொகையை திரட்ட இயலவில்லை. ஆதலால் அறச்சிந்தை கொண்ட தங்களைப் போன்றோர்களின் நன்கொடைகளைக் கொண்டு இப்பெரியச் செயலை செய்து முடிக்கத் துணிவு கொண்டிருக்கிறேன். தாங்கள் என் மகளின் எதிர்கால நல்வாழ்விற்கு உதவி புரிந்து வழங்கும் நன்கொடையை இறைவனின் கருணை மழையாக கருதுவேன். தாங்கள் வழங்கும் நன்கொடையை

**Madras ENT Research Foundation Chartable Trust**
**A/c Narkeez Fathima**

என்ற பெயரில் காசோலையாகவோ (செக்), வரைவோலையாகவோ (டி.டி.) கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி உதவ வேண்டுகிறேன்.

**நன்கொடைக்கு 80G பிரிவின் கீழ் வருமான வரிவிலக்கு உண்டு என்பதை மிகத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.**

*தங்கள் மேலான உதவியை எதிர்நோக்கும் அன்பன்*

**A.முகமது சபீக்,** அலைபேசி : 9894281002

*நன்கொடைகள் அனுப்ப வேண்டிய முகவரி :*
**Women's Welfare Syndicate,**
8/2, Avenue Road, Nungambakkam, Chennai - 34. Ph : 42137401, 28235324

Advt.



# லஜ்ஜாவதி

ஒரு சின்ன பிட்டை ரொம்ப சுவாரஸ்யமா ஊதிப் பெருசாக்கி, மூணு மணி நேரம் காமெடியா கதை சொல்லியிருக்காரு டைரக்டர் பூபதி பாண்டியன். எது எதையோ அடமானம் வச்சு பிசினஸ் தொடங்கறோம்... காதலை அடமானம் வச்சா என்னங்கற பொறிதான் படத்துக்கு பேஸ். தனுஷுக்கும் பிரகாஷ்ராஜுக்கும் அல்வா சாப்பிடறா மாதிரி... சாப்பிட்டிருக்காங்க. ஒவ்வொரு முறை தனுஷ் தகிடுதத்தம் பண்றதும், அதை முறியடிக்க பிரகாஷ் ராஜ் தவிக்கறதும் இளவரசு எரியற நெருப்புல எண்ணெய் ஊத்தறதும் அசத்தல். ஸ்ரேயா காதலுக்காக உருகும்போது கண்கலங்க வச்சிடுறார். கொஞ்சமே வந்தாலும் மயில்சாமி கலகலப்பு சாமி. பையனை வீட்டை விட்டுத் துரத்திட்டு, அவன் பார்க்க வரும்போது பார்க்காம உள்ளே வந்துடுற மௌலி, 'இன்னும் கொஞ்ச நேரம் நின்னிருந்தா மனசு கேக்காம அவனை உள்ளே வரச் சொல்லியிருப்பேன்'னு பொறுப்புள்ள அப்பாவா மிளிர்றார். யார் அந்தக் குட்டிப்



# ஆடுபுலி ஆட்டம்

புதுக் கூட்டணியோட கன்னி முயற்சி. 'என்கவுன்ட்டர்'னு படத்துக்குப் பேர் வச்சிருக்கலாம். அந்த அளவுக்கு ரௌடிகளைப் போட்டுத் தள்ளுது போலீஸ். கட்சி உதவியால கல்யாணம் பண்ணின அன்னிக்கே எல்லாத்தையும் சுருட்டிக்கிட்டுப் புருஷன் ஓடறதும், பித்துப் பிடிச்சுப் போற பொண்ணு, குழந்தையப் பெத்தெடுக்கறதும் ஷாக்கான ஆரம்பக் காட்சிகள்.
ஆனா போகப் போக படம் சாதாரணமாயிடுது. புதுமுகம் மணிபிரகாஷ் நடிப்புல நல்ல தேர்ச்சி. இன்னும் நல்லாப் பயன்படுத்தியிருக்கலாம். கதாநாயகி வெண்ணிலாவுக்கு இன்னும் நடிப்புல தேர்ச்சி வேணும். செயற்கைத்தனம் மிளிருது. பூவிலங்கு மோகனும் அப்படித்தான். வெள்ளைத்துரையா வர்ற போலீஸ்காரர் கம்பீரமா இருக்கார். ஆனா பாவம், கத்தறதுலயே பாதிப் படத்தைக் கடத்துடுறார்.

பிரவீன் மணியோட பின்னணி இசை பிரமாதம். அழுத்தமா கதை சொல்ல நினைச்சிருக்குற டைரக்டர் சஞ்சய்ராம், அதுக்கேத்த திரைக்கதை அமைக்கல. பெட்டர் லக் நெக்ஸ்ட் டைம்.



பையன்? சரியான குட்டி!

டயலாக்தான் உயிர்நாடி. தொடர்ச்சியா காமெடி வசனங்கள் படம் முழுக்கக் கண்சிமிட்டி கலகலப்பூட்டுது. கீப் இட் அப் பூபதி. இமான் இசையில பாடல்கள் இதம். "என்னம்மா கண்ணு" ரீமிக்ஸ்ல நக்கல் நையாண்டி தாண்டவமாடுது.




சில சமயங்கள்ல தனுஷ் ஸ்ரேயாவுக்குத் தம்பி மாதிரி தெரியறார். ஒண்ணு, அவர் இன்னும் கொஞ்சம் சதை போடணும். இல்ல, அவருக்குத் தகுந்த ஹீரோயினை செலக்ட் பண்ணணும். படத்தோட ஆரம்பத்துல ஊர் இளைஞர்கள் குழு பொண்ணு வயசுக்கு வந்ததைக் கொண்டாடறதும், அதை ஊரே பாராட்டறதும் ரொம்ப மலிவான சிந்தனை. அடுத்தடுத்த படைப்புகள்ல இதையெல்லாம் அண்ணன் பூபதி தவிர்ப்பாருன்னு நம்புவோம்.



# திருவிளையாடல் ஆரம்பம்

அடுத்தடுத்த சீன் என்னன்னு பாதியில படத்துல நுழைஞ்சவங்ககூட கண்டு பிடிக்க முடியறது பெரிய பல வீனம். அண்ணி, மைத்துனன் உறவை 'உயிர்' படம் மாதிரி கொச்சைப்படுத்திடுவாங்களோன்னு நடுங்கிக்கிட்டே பார்த்தேன். நல்லவேளை, பாஸிட்டிவா காட்டிப் பட்டையைக் கௌப்புறாங்க.

பிரம்மாவின் இசை படத்துக்குக் கூடுதல் பலம். ராஜ சரவணனோட ஒளிப்பதிவுல தரமிருக்கு. இழுவையான காட்சிகளைத் தைரியமா கத்திரி போட்டிருக்கலாம், மிஸ் பண்ணிட்டாங்க. 'அழகிய அசுரா' பயமுறுத்துற மாதிரி இல்லாதது பெரிய ஆறுதல்.

ஹீரோவுல ஆரம்பிச்சு இயக்குநர் வரை எல்லாருமே புதுமுகங்கள். ஆனா கதைதான் ரொம்பப் பழசு. முழுக்க முழுக்கக் காதலையே மையப்படுத்தி, காதல் காவியம் படைக்க நினைச்சிருக்காங்க. நல்லவேளை காமெடியா முடியல.

தேங்காய் சீனிவாசன் பேரன் யோகிதான் ஹீரோ. இவர் படத்துல அடிக்கிற லூட்டில தியேட்டரே கலகலக்குது. கதாநாயகி ரெஜினா, நல்ல தேர்வு. புதுமுகம் மாதிரி தெரியாம துறுதுறு நடிப்பை வெளிப்படுத்தியிருக்கார். இவங்க ரெண்டு பேரோட நண்பர்களா வர்றவங்களும் இயல்பான நடிப்பை அள்ளி வழங்கியிருக்காங்க.

# அழகிய அசுரா



# சுஜாதா



12

'கடவுளின் வடிவம் என்ன, அவருக்குப் பெயர் என்ன, எப்படி கடவுளைப் பற்றி நாம் சிந்திப்பது' என்ற குழப்பம் மனித சரித்திரத்தில் ஆதி காலத்திலிருந்து உள்ளது.







ஆதிமனிதன் இரவின் இருளையும் இடி, மின்னல் போன்ற சமாசாரங்களையும் கண்டு பயந்ததால் அவற்றை ஆளும் வடிவங்களாக கடவுளை எண்ணிப் பார்த்தான். தன்னிலிருந்து வேறுபட்டமைந்த மிருகங்கள் வடிவில் கடவுளை யோசித்தான். தெரிந்த மிருகங்கள், கற்பனை மிருகங்களிலிருந்து தனக்கே அதிக கைகால்கள் சக்திகள் கொடுத்து 'கடவுள்' என்றான்.

மெள்ள மெள்ள தன் வடிவிலேயே கடவுளும் இருக்கிறார் என்று சொல்ல ஆரம்பித்தான். Anthropomorphism என்னும் மனித உருவாக்கத்துக்குப் பின் கடவுளுக்கு வடிவமே தேவையில்லை என்ற தீர்மானத்துக்கு வந்தான். ஆனால் கடவுள் என்ற கருத்தை மனத்தில் உருவாக்கிக்கொள்ள ஒரு வடிவம் சாதாரண ஜனங்களுக்குத் தேவைப்பட்டது. இதில் மதத்துக்கு மதம் கருத்து வேறுபாடும் பிடிவாதமும் வரும்போது சண்டைகள் வந்தன. 'என் கடவுள்தான் உண்மையான கடவுள், மற்றதெல்லாம் பொய்த் தெய்வங்கள்' என்று ஒவ்வொரு மதமும் அதனதன் துவக்க காலங்களில் அழுத்தமாகச் சொல்லி, 'அதற்காக உயிர்த் தியாகம் செய்யவும் செய்யலாம்; செய்தால் நேராக சொர்க்கத்துக்குப் போகலாம்' என்று சலுகைகள் தந்தன.

இன்றைய தினங்களிலும் அம்மாதிரி பிடிவாதங்கள்தான் உலகில் பெரும்பாலும் வடியும் ரத்த ஆறுகளுக்குக் காரணம்.

பொய்கையாழ்வார் காலம் சுமார் கி.பி. 600. அப்போதே இம்மாதிரி பூசல்களைச் சந்தித்திருக்கிறார். பௌத்த ஜைனக் கருத்துகளும் சாக்கியமும் சைவமும் வைணவமும் முரண்பட்ட காலம்.

'நாராயணன்தான் கடவுள் என்பதை எப்படிச் சொல்வது? அவன் உருவத்தை எப்படி வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். யாரைச் சொன்னாலும் அவனைத்தான் சொல்கிறீர்கள்' என்றார்.

தமருகந்ததுஎவ்வுருவம் அவ்வுருவம்தானே
தமருகந்ததுஎப்பேர் அப்பேர் -
தமருகந்து

# அனைத்தும்

## வாரம் ஒரு பாசுரம்

எவ்வண்ணம் சிந்தித்து
இமையாதிருப்பரே
அவ்வண்ணம் ஆழியானாம்.

(உகந்தது - விரும்பியது. இமை யாதிருப்பரே - இடைவிடாமல் தியானம் செய்தால்)

**எ**ந்த உருவத்தை விரும்புகிறோமோ அதுதான் அவன் உருவம்; எந்தப் பெயரை விரும்புகிறோமோ அதுதான் அவன் பெயர். எப்படிச் சிந்தித்தாலும் நீங்கள் சந்திப்பது கையில் சக்கரமுள்ள திருமால்தான்.

நீ யாரைச் சிந்தித்தாலும் பேரைச் சொன்னாலும் அவனைத்தான் சொல்கிறாய். அதனால் உன்னுடைய தெய்வத்தையே உன்னுடைய கிரமப்படி வணங்கிக் கொள் என்று அனுமதி தருகிறார்.

'ஈஷ்வர அல்லா தேரே நாம்' என்று ஒரு தாத்தா பிற்காலத்தில் விரும்பிப் பாடினதும் இதுதான்.

# அவனே!



ரா ஜபட்சய

# "நான் தமிழர்களுக்கு எதிரியல்ல!"

**இலங்கை அதிபர் மஹிந்த ராஜ பட்சய ராமநாதபுரம் தொகுதி காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர் ஹசன் அலி யின் நீண்டகால நண்பர். சமீபத்தில் இருமுறை அவரைச் சந்தித்த அனு பவங்களை நம்மிடம் விவரித்தார் ஹசன் அலி.**

"எனது தந்தை 40, 50 வருடங்களுக்கு முன்னர் கொழும்பில் வர்த்தகம் செய்ததால் பல முறை நான் கொழும்புவுக்குச் சென்றிருக்கிறேன். முப்பது வருடங்களுக்கு முன்னர் அரசு உயர் வழக்கறிஞராக இருந்த திவாங்கா விக்ரம சிங்கே, அவரிடம் ஜூனியராக இருந்த மஹிந்த ராஜபட்சயவை அறிமுகப்படுத்தி வைத்தார். அன்று முதல் நாங்கள் நண்பர்களாகிவிட்டோம். எப்போது கொழும்புவுக்குச் சென்றாலும் அவரைச் சந்திப்பதுண்டு. அவருக்குத் தமிழில் பேசவும் சொல்லிக் கொடுத்தேன். கால ஓட்டத்தில் ராஜபட்சய, பாராளுமன்ற உறுப்பினர், பிரதமர் என்று வளர்ச்சியடைந்து அதிபர் பதவியிலும் அமர்ந்துவிட்டார். நான் ராமநாதபுரம் தொகுதி எம்.எல்.ஏ.வாக வெற்றி பெற்ற போது, முதல் வாழ்த்து மஹிந்தவிடமிருந்துதான் வந்தது.

நான் எம்.எல்.ஏ. ஆனதும், பற்றி எரியும் இலங்கைப் பிரச்னைக்காக நண்பரிடம் பேச வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. இதற்கு இரண்டு காரணங்கள். ஒன்று: ராமநாதபுரம் தொகுதியில்தான் ராமேஸ்வரம் இருக்கிறது. இலங்கையிலிருந்து படகுகளில் வரும் அகதிகளின் எண்ணிக்கை 17000ஐத் தொட்டுவிட்டது. அடுத்தது: ராமேஸ்வரம் மீனவர்கள் அவ்வப்போது இலங்கைக் கடற்படையினரால் சுடப்படுவது. இந்தப் பிரச்னையைப் பற்றிப் பேசுவதற்காகக் கொழும்புவுக்குச் சென்றேன். இரண்டு நாட்கள் காலை இருவரும் ஒன்றாக டிபன் சாப்பிட்டோம்.

நான் முக்கியமாக வலியுறுத்தியது, இலங்கையும், இந்தியாவும் சேர்ந்து ராமேஸ்வரம் பகுதியில் கூட்டு ரோந்து நடவடிக்கையை மேற்கொண்டால், அப்பாவி மீனவர்கள் சுடப்படுவதைத் தடுக்கலாம் என்பது. இதற்கு ராஜபட்சயவும் ஒப்புக்கொண்டார். மீனவர்கள் போர்வையில் விடுதலைப் புலியினர் ஆயுதங்களைக் கடத்தும்போது சில சமயங்களில் அப்பாவி மீனவர்கள் சுடப்படுவது தவிர்க்க முடியாததாகி விடுகிறது என்றார். 'இந்திய அரசோடு பேசி ஓர் உடன்பாடு எட்டுவதை நோக்கமாகக் கொண்டுள்ளது சட்டப்படி சரிதான். ஆனால் தமிழ்நாட்டு மக்களின் ஒத்துழைப்பையும் நம்பிக்கையையும் பெற்றுச் செயல்பட்டால்தான், ஒரு நிரந்தரத் தீர்வு காண முடியும்' என்பதையும் அவரிடம் வலியுறுத்தினேன்.



கொழும்பு-யாழ்ப்பாணம் நெடுஞ்சாலையைத் திறக்க வேண்டுமென்றும் கச்சத் தீவுப் பகுதியை அமைதி மண்டலமாக அறிவிக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டேன்.

'நான் தமிழர்களுக்கு எதிரியல்ல' என்று முதலில் வலியுறுத்தினார் ராஜபட்சய. 'நீங்கள் (தமிழ்நாட்டில்) விடுதலைப்புலிகளைத் தமிழர்களின் பிரதிநிதிகளாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். இது தவறு. இலங்கைப் பாராளுமன்றத்தில் பல தமிழர் அமைப்புகளின் பிரதிநிதிகள் இருக்கிறார்கள். தமிழ்நாட்டிலிருந்து வருவோர், இந்தப் பிரதிநிதிகளையும் சந்தியுங்கள். அகதிப் பிரச்னை ஏன் வருகிறது என்பதையும் நேரடியாகச் சென்று பாருங்கள். பிரச்னை தீர்வதற்காகப் புலிகளிடம் பேசவும் தயாராக இருக்கிறேன்' என்ற அதிபர், 'கச்சத் தீவுப் பிரச்னை முடிந்துபோன ஒன்று அதைப் பற்றி மீண்டும் பேச முடியாது' என்று தீர்மானமாகச் சொன்னார்.

'யாழ்ப்பாணம் - கொழும்பு நெடுஞ்சாலையைத் திறந்து உடனே மூடிவிட்டது இலங்கை அரசு. துரதிர்ஷ்டவசமாக, கூட்டு ரோந்து நடவடிக்கைக்கு இந்திய அரசு ஒப்புக்கொள்ளவில்லை. இந்தச் சூழலில் ராஜபட்சய இந்தியாவுக்கு வந்திருந்தபோது நான் அவரைச் சந்தித்தேன்.

'நான் திறந்த மனத்துடன் இருக்கிறேன். தமிழர்களில் புலிகள் இருக்கலாம். ஆனால் எல்லாத் தமிழர்களும் புலிகள் அல்ல. இருந்தும் நாங்கள் புலிகளுடன் பேச்சுவார்த்தை நடத்தத் தயாராக இருக்கிறோம்' என்றார். 'காங்கிரஸ் எந்தச் சூழலிலும் புலிகளை ஆதரிக்காது' என்பதையும் அவரிடம் சொன்னேன்" என்றார் ஹசன் அலி.

- ப்ரியன்



• ராஜபட்சயவுக்கு ஹசன் அலியின் மரியாதை...

# நா.முத்துக்குமார்

# மழை —சில குறிப்புகள்...

* மழை ஒரு அரசியல்வாதி
எப்போதாவது ஒருமுறைதான்
தொகுதிப் பக்கம் எட்டிப் பார்க்கிறது!

* மழை ஒரு குழந்தை
கையில் கிடைத்தவற்றைக்
கிழித்து வீசுகிறது.

* மழை ஒரு காதலி
வருவதாய்க் காக்க வைத்து
வராமல் போகிறது

* மழை ஒரு கன்னிப்பெண்
அழும்போதும்
அழகாக இருக்கிறது.

* மழை ஒரு குடிகாரன்
தண்ணி அடித்துக்
கொண்டே
தரைமேல் விழுகிறது

* மழை ஒரு ஊதாரி
கிறுக்குப் பிடித்து
கடலில் விழுகிறது.

* தண்ணீருக்கு மேல்
பாலம் கட்டலாம்
மழை தண்ணீராலேயே
பாலம் கட்டுகிறது.

* மழை
நீர் தெளித்து
மனிதர்களைத்
தூய்மைப்படுத்துகிறது.

* மனிதர்கள்
குடைபிடித்து
மழையை
அசுத்தப்படுத்துகிறார்கள்

* மழை
ஒழுகி, பாத்திரங்களில்
ஜலதரங்கம் வாசிக்கும்

* கூரை வீடுகளில்
நீங்கள் வாழ்ந்திருக்கிறீர்களா?
வீடுபேறு பெற்ற
வீடுகள் அவை.

* மழையை ஜன்னலில்
இருந்து பார்க்காதே
ஜன்னலை மழையில்
இருந்து பார்.



உ



ஓம் சரவணபவ

# ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமி துணை

ஸ்ரீ சுப்ரமண்ய பக்த சமாஜம் டிரஸ்ட் (பதிவு)
"ஸ்ரீ குஹாஸ்ரமம்" புலிப்பாக்கம் மலை
புலிப்பாக்கம் கிராமம் (Post) செங்கல்பட்டு (RMS)
சென்னை - 603 002. இந்தியா செல்: 98400 45470

**தத் புருஷாய வித்மஹே மஹாசேனாய தீமஹி
தந்ந ஷண்முக : ப்ரசோதயாத்**

அன்புடையீர் நமஸ்காரம்!

நம் பாரத புண்ணிய பூமியில் **ஆறுபடை வீடுகளில்** கோயில் கொண்டு தன்னை வந்து வணங்குவோருக்கு அருளாசி வழங்குகின்ற வள்ளி தேவஸேனா சமேத **ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமியின்** பெருமையை ஸ்ரீ வேதவ்யாஸ மஹரிஷியினால் அருளப்பட்ட மஹாபுராணங்கள் பதினெட்டில் பதிமூன்றாவது அத்தியாயமாக விளங்குவது **ஸ்ரீ ஸ்கந்த புராணம்** ஆகும். தன்னுடைய தந்தைக்கு ஓங்காரத்தின் மெய்ப்பொருளை உரைத்தவனும், அதன் உட்பொருளாய் விளங்கு பவனுமாகிய ஸ்வாமிநாதனின் வைபவத்தை அவனுடைய திவ்யலீலைகள், அவன் எடுத்த அவதாரங்கள் முதலியன விளக்கமாக நிரூபணம் செய்யப்பட்டிருக்கின்றன. இவ்வளவு சக்தி வாய்ந்த **முருகப் பெருமான்** நான்கு தடவைகள் விஸ்வரூபத்தை எடுத்துக் காட்டியதாக புராணம் கூறுகிறது. முதலாவதாக இந்திரயாதி தேவர்களுக்கு அவர் தன் பெருமையை தெரிந்து கொள்ள விஸ்வரூபம் எடுத்துகாட்டி அருளாசி வழங்கினார். சூரபத்மன் செய்த தவத்தின் பயனாகவும், அவன் மீதுள்ள அன்பினாலும் சூரபத்மாஸுரனுக்கு தன்னுடைய விஸ்வ ரூபத்தை காட்டியது இரண்டாவதாகும். சங்கர ஸம்ஹிதையிலும், ஜயந்தி புரமான்மியத்திலும் திருச்செந்தூர் புராணத்தில் உள்ளபடி தன் ஸஹோதரனும், முருகன் மீது எல்லையில்லா பக்திகொண்ட வருமான வீரபாகுத் தேவருக்கு காட்டியது மூன்றாவதாகும். வள்ளி, தெய்வானை ஆகிய இரு மனைவிகளுள் வள்ளி கேட்டுக் கொண்டதின் பேரில் தன்னுடைய விஸ்வரூபத்தைக் காட்டியது நான்காவது தடவையாகும்.

இவ்வளவு பெருமை வாய்ந்த விஸ்வரூப **ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமியை** 36 அடி (முப்பத்தாறு) உயர சிலை ரூபத்தில் அமைத்து பக்தர்கள் தரிசிக்கும் வண்ணம் ஆலயம் கட்டும் பூர்வாங்க பணிகள் புலிப்பாக்கம் கிராமத்தில் பதஞ்சலி முனிவரால் 1200 ஆண்டுகளுக்கு முன் பிரதிஷ்டை செய்த ஸ்ரீ வியாக்ரபுரீஸ்வரர் அருள் பாலித்துவரும் சிவன் கோயில் புண்டரீக வரதராஜ பெருமான் அமைந்துள்ள மலையில் நடைபெற்று வருகிறது. சென்னைக்கு அருகில் ஸ்வாமி விஹ்ரஹம் செய்ய தேவையான 43 அடி உயர கருங்கல் எடுத்து சிலை வடிக்கும் பணிகள் நடந்து வருகிறது.

காமதேனு என்ற பசு மாட்டின் உடம்பில் எல்லா தெய்வங்களும் எப்படி குடி கொண்டுள்ளதோ அதே மாதிரி **ஸ்ரீ முருகப் பெருமான்** விஸ்வரூபம் எடுத்த பொழுது எல்லா தேவதைகளும், எல்லா தெய்வங்களும் குடி கொண்டதாக ஸ்கந்த புராணம் கூறுகிறது. அவ்வளவு புகழ்வாய்ந்த விஸ்வரூப **முருகப்பெருமானை** வணங்கி ஆராதித்தால் எல்லா தெய்வங்களையும் ஒரே இடத்தில் தரிசனம் செய்த புண்ணியம் கிடைக்கும். இத்திருப்பணிக்கு ரூபாய் **5,000/-** (ரூபாய் ஐந்தாயிரம் மட்டும்) அனுப்பி நிரந்தர கட்டளைதாரர்களாக செய்து கொள்பவர்களுக்கு அவர்கள் விரும்பும் நாளில் வருடத்திற்கு ஒருமுறை ஆராதனை செய்து பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். ஆஸ்திக மஹா ஜனங்கள் அனைவரும் இப்புனிதமான பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு தங்களால் இயன்ற அளவு பொருளுதவியை காசோலையாகவோ அல்லது ட்ராப்டாகவோ **ஸ்தாபகர் டிரஸ்டி** பெயரில் மேற்கண்ட முகவரிக்கு அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறோம்.

**வெற்றி வேல் முருகனுக்கு ஹர ஹரோஹரா**

**குறிப்பு:** இதுவரை நிரந்தர கட்டளை ஆராதனைக்கு பணம் அனுப்பிய அன்பர்கள் விரைவில் நடைபெற இருக்கும் கும்பாபிஷேகம், ஆலய விழாக்களுக்கு பத்திரிகை மற்றும் ப்ரசாதம் அனுப்புவதற்கும் தங்கள் முகவரியை உடனே எழுதி அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறோம்.

தாங்கள் அனுப்பும் நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.



சந்திப்பு

# "மொழிய மாத்து... இல்ல ஆள மாத்து!"

• இந்திரா பார்த்தசாரதி

**எழுத்தாளர்கள் இந்திரா பார்த்தசாரதியும் அசோகமித்ரனும் 'குஷி' சிறப்பிதழுக்காகச் சந்தித்து, மனம்விட்டுப் பேசிச் சிரித்தனர். அந்த நிகழ்விலிருந்து ஒரு சில பகுதிகள்...**

**அசோகமித்ரன் :** குஷின்னாலே எல்லாருக்கும் தங்களோட சின்ன வயசு சந்தோஷங்கள்தான் ஞாபகம் வருது. நான் என் பன்னிரண்டாவது வயசு வரைக்கும் ரொம்பக் குஷியா இருந்தேன். 1960ன்னு நெனக்கிறேன்... மதுரை வீரசோழ ஆத்துல நேரம் காலம் இல்லாம பசங்களோட சேர்ந்து நீச்சலடிச்ச ஆத்தங்கரை அனுபவத்த இன்னிக்கு நினைச்சாலும் மனசெல்லாம் குளிருது.

**இந்திரா பார்த்தசாரதி :** இப்பவும் போயி அப்படி நீச்சலடிங்களேன்.

**அசோ :** அதுக்கப்புறம் எத்தனையோ முறை அந்த ஆத்தைப் பாக்குறேங். ஆனா நீச்சலடிக்க முடியல. ஏன்னா ஆத்துல தண்ணியே இல்லை!

**இ.பா. :** அந்த மாதிரி அனுபவமெல்லாம் நமக்குக் கிடையாது. ஆனா டெல்லி யுனிவர்சிட்டியில பேராசிரியரா வேலை செஞ்ச அனுபவம் அலாதியானது. யுனிவர்சிட்டியில ஹிந்தி அல்லாத பிற மொழிகளில் டிப்ளமோ கோர்ஸ் உண்டு. தமிழ் கோர்ஸில் வருஷத் தொடக்கத்துல நிறைய பேர் சேருவாங்க. ஆனால், வருஷக் கடைசியில ஒண்ணு, ரெண்டு பேர்தான் வகுப்புக்கு வருவாங்க.

**அசோ :** நம்ம ஊர்ப் பசங்களே தமிழ்ல படிக்கறது இல்லியே, அப்புறம் டெல்லிப் பசங்க எப்படிப் படிப்பாங்க..?

**இ.பா. :** இல்ல.. ஒரே ஒரு பஞ்சாபி மாணவர் மட்டும் சலிக்காம கடைசி வரைக்கும் வந்துட்டே இருந்தார். அவரைப் பார்த்தாலே எனக்குச் சந்தோஷமாயிடும்.

**அசோ :** உண்மையிலேயே பாராட்டணும். தமிழ் மேலே அவருக்கு அத்தனைக் காதலா...

**இ.பா. :** நானும் அப்படித்தான் நெனச்சேன். ஆனா அவரு எங்கிட்ட என்ன சொன்னாரு தெரியுமா? 'சார், நான் ஒரு மதராஸியைக் காதலிக்கிறேன். அவங்களை இம்ப்ரஸ் பண்ணத்தான் தமிழ்

கத்துக்கறேன்'னாரு. அப்பவும் காதலுக்காக ஒருத்தர் நம்ம மொழியைக் கத்துக்கறாருன்னு சந்தோஷப்பட்டேன்.

**அசோ** : கடைசி வரைக்கும் இருந்து முழுசா கத்துக்கிட்டாரா?

**இ.பா.** : இல்லையே... ஒரு நாளு திடீர்னு வந்து 'நான் காதலிச்ச பொண்ணு தமிழ்ப் பொண்ணு இல்லே'ன்னாரு. விந்திய மலைக்குக் கீழே இருக்கிறவங்க எல்லாம் மதராஸி, அவங்க பாஷை தமிழ்னு தவறா புரிஞ்சு வைச்சிருக்காரு.

**அசோ** : அப்புறம் என்னாச்சு?

**இ.பா.** : நான் சொன்னேன்... ஒண்ணு மொழிய மாத்து, இல்ல ஆள மாத்துன்னு. கரெக்ட்தானே?

(இருவரும் சிரிக்கிறார்கள்)

**இ.பா.** : இன்னொரு சம்பவம்... நான் அண்ணாமலை யுனிவர்சிட்டியில் படிச்சிட்டு இருந்த நேரம். சென்னைக்கு ஒரு வேலையா வந்து என் நண்பர் வீட்ல தங்கினேன். அப்போ என் அப்பாகிட்ட நான் தங்கியிருந்த முகவரியைச் சொல்லி என்னை வந்து பார்க்கச் சொன்னேன். என் ஃப்ரெண்டு வீட்டுக்கு வந்த அப்பா, பெரிய கூத்தே நடத்திட்டார்.

**அசோ** : என்ன பண்ணினார்?




**இ.பா.** : அவர் வீட்டுக்கு வந்தப்ப அந்த வீட்டுப் பொண்ணு வாசல்ல நின்னுக்கிட்டு இருந்திருக்கு. அந்தப் பொண்ணுகிட்ட 'பார்த்தசாரதி இருக்கானா?'ன்னு கேட்டிருக்கார். அவளும், 'இருக்கார் மாடியில சந்தியாவந்தனம் பண்ணிட்டு இருக்கார்'னு சொல்லியிருக்கா. அப்பாவுக்கு ஒரே ஆச்சர்யம். 'நம்ம பையனுக்குத்தான் இதுல எல்லாம் நம்பிக்கை கிடையாதே, அப்புறம் எப்படி'னு. அதே ஆச்சர்யத்தோட 'நீ யாரும்மா?'ன்னு கேட்டிருக்காரு 'நான் அவரோட மகள்'னு அந்தப் பொண்ணு சொல்ல, அப்பாவுக்குப் பயங்கர டென்ஷன், பையனுக்குக் கல்யாணமே ஆகலையேன்னு... அதே டென்ஷனோடு மாடிக்கு வந்தவரு உண்மை தெரிஞ்சு, 'உன் ஃப்ரெண்டு பேரும் பார்த்தசாரதியா'ன்னு சொல்லிட்டு, 'கொஞ்ச நேரத்துல ஆடிப் போயிட்டேன்'னு வாய்விட்டுச் சிரிச்சாரு... ரொம்ப நாளைக்கு அந்த விஷயத்தை அவரால மறக்க முடியல...

**அசோ** : அதுதான் குஷி. சந்தோஷம்ங்கறது வெறும் பணம், ஆடம்பரத்தில் இல்லை. அது மனசு சம்பந்தப்பட்ட விஷயம். ஒரு விஷயத்தை நாம எப்படிப் பார்க்கிறோம்ங்கறதுலதான் இருக்கு. அப்படிப் பார்த்தா ஒவ்வொரு நிமிஷமும், அனுபவமும் சந்தோஷம்தான்.

• அசோகமித்திரன்

தொகுப்பு : சுகந்தி ஜி.பாரதி
படங்கள் : ஸ்ரீஹரி

# ஹி ஹியாலஜி



''இருபத்தஞ்சு வயசுக்கு மேல, முப்பது வயசுக்குள்ளதான் பயமறியாத பருவம்போல...''

''எப்படிச் சொல்றே?...''

''எல்லாரும் அந்த வயசுலதானே கல்யாணம் பண்ணிக்கறோம்...''

- கே.ஆனந்தன்



''பசங்களா... இன்னிக்கு என் கல்யாண நாள்..''

''எல்லாரும் எந்திரிச்சு ரெண்டு நிமிஷம் மௌனமா நிக்கட்டுமா, சார்?''

- வசந்தி வள்ளுவன்

## பயமறியாத பருவம்!



''ஏன்டா ஒரே சைக்கிள்ல நாலு பேர் போறது தப்புன்னு தெரியல உங்களுக்கு?''

''தப்புதான் சார். ஆளுக்கொரு சைக்கிள் எடுத்துக்கிட்டுப் போகலாம்னுதான் நினைச்சோம். ஆனா ஒண்ணே ஒண்ணுதான் பூட்டாம இருந்துச்சு.''

- ஜி.வி.சுபாஷ்



மனசு விட்டுச் சிரிக்க எந்தப் பருவமும் ஓகேதான்!

வந்துவிட்டார்! திகம்பர சாமியார்

ஆங்கில நாவல்களுக்கு இணையாக

# THRILLERS IN தமிழ்

1930-களில்
தமிழகத்தை கலக்கி
தமிழ் வாசகர்களை அசர வைத்த

**வடுவூர் கே.துரைசாமி ஐயங்கார்**, பி.ஏ.,

எழுதிய நாவல்கள் – புதுப்பொலிவுடன்

ஆங்கிலத்தில் ஷெர்லாக் ஹோம்ஸ்
நவீன காலத்தில் 007 ஜேம்ஸ்பாண்டு
தமிழகத்தில் அன்றும் இன்றும் என்றும்

# திகம்பர சாமியார்

என்று போற்றப்படக் கூடிய, **தரமான, த்ரில்லர்கள்**
விறுவிறுப்பான **துப்பறியும்** கதைகள்
கையில் எடுத்தால் கீழே வைக்க முடியாத அளவிற்கு கட்டிப் போடும்.
உவகையூட்டும் நாவல்கள் வெளிவந்து விட்டன.
வரம்பு மீறல்கள், நயவஞ்சகம் சூழ்ச்சி ஆகியவற்றை பிரமிப்பூட்டும் வகையில்
முறியடிக்கும் திகம்பர சாமியார் மற்றும் பிற கதாபாத்திரங்கள்.



| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பூர்ண சந்திரோதயம் | (5 பாகங்கள்) | ..... | ரூ. 650.00 |
| 2. | கும்பகோணம் வக்கீல் | (2 பாகங்கள்) | ..... | ரூ. 200.00 |
| 3. | மாயா விநோதப் பரதேசி | (3 பாகங்கள்) | ..... | ரூ. 365.00 |
| 4. | மேனகா | (2 பாகங்கள்) | ..... | ரூ. 250.00 |
| 5. | மதன கல்யாணி | (3 பாகங்கள்) | ..... | ரூ. 355.00 |
| 6. | சௌந்திர கோகிலம் | (4 பாகங்கள்) | ..... | ரூ. 460.00 |
| 7. | பாலாமணி (அ) பக்காத் திருடன் | (2 பாகங்கள்) | | ரூ. 170.00 |
| 8. | வசந்த மல்லிகா | | ..... | ரூ. 110.00 |
| 9. | வித்யாசாகரம் | | ..... | ரூ. 100.00 |
| 10. | பன்னியூர் படாடோப சர்மா | | ..... | ரூ. 150.00 |
| 11. | திவான் லொடபடசிங் பகதூர் | | ..... | ரூ. 40.00 |
| 12. | திரிபுரசுந்தரி (அ) திகம்பரசாமியார் திடும்பிரவேசம் | | | ரூ. 130.00 |
| 13. | வஸந்த கோகிலம் | | ..... | ரூ. 90.00 |
| 14. | தங்கம்மாள் (அ) தீர புருஷனின் தியாக கம்பீரம் | | | ரூ. 75.00 |









(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபால்பெட்டி எண் 617, மயிலாப்பூர்,
சென்னை - 600 004, தொலைபேசி : 24641314
e-mail : www.alliancebook.com
visit us at : Srinivasan@alliancebook.com




பஞ்சாபில் சட்டமன்றத் தேர்தல் வருகிறது. பஞ்சாப் விஷயத்தில் தேர்தல் கமிஷனுக்கு இலேசான பிரஷர் தரப்படுகிறது என்று சொல்லப் படுகிறது. இன்னும் சில நாட்களில் பிரதமர் மன்மோகன் சிங் பஞ்சாபுக்கு விஜயம் செய்து, ஏகப்பட்ட சலுகைகளை அறிவிக்க இருக்கிறார். எனவே, அந்த அறிவிப்புகளுக்குப் பிறகு தேர்தல் நடத்தை விதிமுறைகளை அமல்படுத்துங்கள் என்று காங்கிரஸ் தரப்பிலிருந்து தேர்தல் கமிஷனுக்கு வாய்மொழி உத்தரவு போடப்பட்டுள்ளதாம்.

ஒரிசா மாநிலத்தைச் சேர்ந்த அதிசயச் சிறுவன் புதியா சிங். மாரத்தான் ஓட்டம் ஓடியபோது அவனது சாதனையைப் பாராட்டியும், அவனை ஊக்குவிக்கவும் பல தனியாரும், தொழில் நிறுவனங்களும் அவனுக்கு நிதி உதவி அளித்தன. அப்படி வழங்கப்பட்டவற்றில் காசோலைகளை வங்கியில் போட்ட போது, சுமார் ஐந்து இலட்சம் மதிப்புள்ள காசோலைகள் திரும்பி வந்துவிட்டனவாம்! இப்படித் திரும்பி வந்துவிட்ட காசோலைகளில் உள்ளூர் அரசியல்வாதிகள் தொடங்கி அயல்நாட்டு டீ.வி. சேனல் வரை பலரும் அடக்கம்" என்கிறார் புதியாவின் பயிற்சியாளரான பிரான்சிதாஸ்.



# ஐயோ பாவம் சபாநாயகர்!

மக்களவையில், எந்த ஒரு விவாதம் என்றாலும் ஆணித்தரமா தமது கட்சியின் கருத்தை எடுத்துச் சொல்லி வந்தவர் மார்க்சிஸ்ட் கட்சியின் சோம்னாத் சாட்டர்ஜி. இந்த முறை அவருக்குச் சபாநாயகர் ஆசனம் அளிக்கப்பட்டுவிட்டது. எனவே, அவரது வாதங்களுக்கு வழி இல்லாமல் போய்விட்டது. அண்மையில் கொல்கத்தாவில் ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொண்ட சோம்னாத் சாட்டர்ஜி, "இப்போதெல்லாம் நான் நீண்ட நேரம் பேசுகிற பழக்கத்தைவிட்டுவிட்டேன். நான் அதிகமாகப் பேசும் வாக்கியங்கள் இரண்டுதான்: 1) 'தயவு செய்து இருக்கைக்குத் திரும்புங்கள்' 2) 'தயவு செய்து அமருங்கள்."

அடுத்த வருடம் பிப்ரவரி மாதத்தில்

- சி.எம்.





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.

கிளை நிறுவனம் : புதிய எண். 16, பழைய எண். 19, முதல் மாடி, 30வது தெரு,
தில்லைகங்கா நகர், நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

## புத்தாண்டு-பொங்கல் நல்வாழ்த்துக்கள்

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் **"ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்"** தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

# பூஜா

'என்ன ஆச்சு, பூஜா சத்தமே காணோம்' என்று அங்கே இங்கே விசாரித்துக் கொண்டிருந்தால் ''என்ன அப்ஸ்காண்டிங்னு நினைச்சுட்டீங்களா; பொறி வருது? தகப்பன் சாமி வருது. ஆட்டோ வருது'' என்று தம் கட்டித் தம் படங்களைப் பட்டியல் போட்டார் பூஜா.

''ஸ்டாப் ஸ்டாப்; சரி ஒரு பந்தயம், சினிமா தவிர்த்துப் பேச முடியுமா?'' என்று பூஜாவிடம் சவால் விட்டோம். 'ப்பூ...' இவ்ளோதானா... ஒண்டிக்கு ஒண்டி



# ஒண்டிக்கு ஒண்டி!



பார்த்துடுவோம்'' என்று காற்றில் ஊதினார்.

போட்டி ஆரம்பமானது.

பள்ளியில் பட்டப் பெயர்?

"பூ"

குட்டை எப்படிச் சொல்வீங்க?

'நான் எப்பவும் குட்டை சொல்ல மாட்டேன். மீண்டும் வருகன்னுதான் சொல்வேன்." (ஆஹா, இது துணிக்கடை வாசகமாச்சே)

பெண்களிடம் பிடித்தது...

"பொதுநலம், மதிப்பு, மரியாதை, நம்பிக்கை."

கடவுள் படைப்பில் ஏதேனும் குற்றம் குறை?

"நான் இன்னும் கொஞ்சம் உயரமா இருந்திருக்கலாமோ!"



**எ காஃபி வித்...?**

"ஸ்ரீலங்காவில் உள்ள என் தாத்தாவுடன். அவருடைய உழைப்பும் பாசமும் எனக்கு ஒரு முன்னுதாரணம்."

**பூஜாவைப் பற்றி ஒரு வரி?**

"சமர்த்துப் பெண்; சாதாரணத் தேவைகள் உடைய ஒரு சாதாரணப் பெண்."

**வாழ்க்கையில் அவசியம் வேண்டிய ஐந்து?**

"கடவுள், குடும்பம், நண்பர்கள், செல்லப் பிராணிகள்... நிம்மதி."

**பெண் காதலில் விழுந்தால்...**

"உடனே சமையல் கற்றுக் கொள்வாள்."

**யார் மீது தக்காளி வீச ஆசை?**

"மோசமான ஓட்டுநர்கள் மீது."

**முதல் காதல்?**

"பதினாலு வயசுல. காதல் அல்ல. அது ஒரு இன்ஃபாச்சுவேஷன்"

**யார் மனசுல யாரு?**

"நூற்றியொரு க்ளூ கொடுத்தாலும் கண்டு பிடிக்க முடியாது. ஏன்னா எனக்கே தெரியாது."

**சரி, சமீபத்தில் கேட்ட கிசுகிசு?**

"ஐஸ்வர்யா ராய் - அபிஷேக் பச்சன் காதல்!"

அடுத்த நொடி தலையில் கைவைத்து உட்கார்ந்து கொண்டார் பூஜா.

**- சநகன்**

படங்கள்: **ஆண்டனி ஸ்ரீதர்**





# கங்குலி



# என்னம்மா கண்ணு... சௌக்கியமா?

கங்குலி ஐம்பதை நெருங்கிக் கொண்டிருக்கிறார். வயதில் அல்ல, ரன்களில்! ஒருவேளை நாற்பத்தொன்பதில் அல்பாயுசில் அவுட் ஆனாலும் ஆகலாம். தென் ஆப்பிரிக்கா குறி வைத்து ஒவ்வோர் இந்திய விக்கெட்டையும் வீழ்த்திக் கொண்டிருந்த சமயத்தில் மேற்கு வங்கம் முழுக்கச் சரவெடிகள் கொளுத்தப்பட்டன. குறிப்பாக, கங்குலி வீட்டு முன்பு டென் தவுசண்ட் வாலாக்கள் கன்னா பின்னாவென்று கொளுத்தப்பட்டன. சிறிது நேரத்தில் ஊர் முழுக்கக் குப்பைக் கூளம். புகை மண்டலம். தாதா ஃபிஃப்டி அடித்து பேட்டை உயர்த்திக் காட்டிய போது ஒட்டுமொத்த கங்குலி ரசிகர்கள் வயிற்றிலும் பால் வார்க்கப்பட்டது (டீ.வி. கேமரா மறக்காமல் சேப்பல் எழுந்து நின்று கைதட்டுவதைக் காட்டியது குசும்பு!)

உடனே ஊர் முழுக்க போஸ்டர் ஒட்டப்பட்டது. 'பெங்கால் புலி சிலிர்த்தது எழுந்துவிட்டது. ஆஸ்திரேலிய கங்காருவே ஜாக்கிரதை!'

கங்குலிக்குக் கடந்த ஒரு வருடமாகக் கதவைச் சாத்தி வைத்த இந்திய கிரிக்கெட் போர்டு, இப்பொழுது மட்டும் எப்படி ரத்தினக் கம்பளம் விரித்தது? 'பூட்ட கேஸ்' என்று முடிவு கட்டப்பட்ட கங்குலி எப்படித் திரும்ப வந்தார்?

ஜகீர்கான் போல இங்கிலாந்து கவுண்ட்டி மேட்சில் எல்லாரையும் திரும்பிப் பார்க்க வைக்கவில்லை. பிறகு எப்படி அவர் இந்திய அணியில் தேர்வானார்? நேற்று வரைக்கும் ஜீரோவாக இருந்தவர், எப்படி ஒரே டெஸ்டில் ஹீரோவானார்?

ஆச்சர்யப்பட வேண்டாம். அரசியல் வாதிகள் பயன்படுத்தும் 'அறிக்கை' டெக்னிக்தான் கங்குலிக்கும் கைகொடுத்திருக்கிறது.

2005 ஜிம்பாப்வே டூரின்போது கங்குலிக்கும் சேப்பலுக்கும் கசமுசா ஏற்பட, அணியிலிருந்தே தூக்கியடிக்கப்பட்டார் கொல்கத்தா டைகர். பிறகு பாகிஸ்தான் டூரில், கராச்சி டெஸ்டில் ஆடினார்.

முப்பது நான்கு மற்றும் முப்பத்தேழு ரன்கள் அடித்தாலும் அந்த ஆட்டத்தில் இந்தியா தோற்றதால் மொத்தப் பழியும் கங்குலி மீது விழுந்தது. மீண்டும் வீட்டுக்கு அனுப்பப்பட்டார்.

வழக்கமாக அணியிலிருந்து தூக்கி எறியப்படும் வீரர்கள் அப்படியே முடங்கிப் போவார்கள். ஆனால் அணியிலிருந்து தூக்கியெறியப்பட்ட மறுநாள் முதல் சூட்சுமமாக ஒரு காரியம் பண்ணினார் கங்குலி. ஏதோவொரு விதத்தில் அரசியல்வாதியைப்போல தினமும் செய்தித்தாள்களிலும் சேனல்களிலும் இடம்பெற ஆரம்பித்தார்.

ஒவ்வொரு முறையும் இந்திய அணிக்கு



வீரர்களைத் தேர்ந்தெடுக்கும்போது "நான் நிச்சயம் இந்த முறை தேர்வாவேன்'' என்று நம்பிக்கையோடு பேட்டி கொடுப்பார். இந்திய அணி தோல்வி பெறும் போதெல்லாம் 'இதெல்லாம் விளையாட்டில் சகஜம்' என்று அணிக்கு ஆதரவாகவும் பேசினார். இப்படி தேர்ந்த அரசியல்வாதியைப்போல - தாம் அணியில் இல்லாவிட்டாலும் இந்திய அணியைப் பற்றிப் பேச்சு எழும்போதெல்லாம் தம்முடைய பெயரையும் கூடவே சாமர்த்தியமாக உள்ளே நுழைத்தார் கங்குலி.

தென் ஆப்பிரிக்காவில் சேப்பல் படைத் தளபதிகள் தள்ளாடிக் கொண்டிருந்த போது, ஆபத்பாந்தவனாக கங்குலியை அனுப்புவதைத் தவிர கிரிக்கெட் போர்டுக்கும் வேறு வழி தெரியவில்லை. இந்திய அணியின் டெஸ்ட் தேர்வுக்கு இரண்டு நாட்கள் முன்பு பெங்கால் அணியின் ரஞ்சி அணி தலைமைப்பதவியிலிருந்து விலகினார். உடனே சேனல்கள் அவரைத் துரத்தின. ஃப்ளாஷ் நியூஸ்கள் ஓடின. தேர்வுக் குழுத் தலைவர் வெங்சர்க்கார் தேர்வு செய்யும் முன்னரே டி.வி. சேனல்கள் கங்குலியை இந்திய அணிக்குத் தேர்வு செய்தன.

தென் ஆப்பிரிக்காவில் தரையிறங்கிய அடுத்த இரண்டாவது மணி நேரத்தில் வீரர்களோடு பயிற்சியில் கலந்து கொண்டார் கங்குலி. 'என் உடம்பு மீது பந்தை வீசி எறியுங்கள். பவுன்சர் போடுங்கள்' என்று பயிற்சியின்போது தம்முடைய வீக் பாயிண்ட்டுகளைக் களைய முயற்சி செய்திருக்கிறார் கங்குலி.

ஆனால் இந்தப் போராட்டங்களெல்லாம் கங்குலிக்குப் புதிதல்ல. 1992, ஆஸ்திரேலியா டூரில் களமிறக்கப்பட்டவர், அப்படியே கழற்றிவிடப்பட்டார். 1996, இங்கிலாந்து டூரில் லார்ட்ஸில் நடந்த முதல் டெஸ்டில் மீண்டும் சேர்க்கப்பட்டார் (அப்போதுதான் டிராவிடும் இந்திய அணியில் இடம் பிடித்தார்). பழைய கதைகளை மட்டும் பேசாமல் எந்தவித ஜம்பமும் காட்டாமல் என் இறுதி மூச்சுக்குப் பிறகு ஓய்வு எடுத்துக்கொள்கிறேன் என்று ரஞ்சிப் போட்டியில் விடாமல் ஆடி, தன்னுடைய இருப்பை உறுதி செய்தார் கங்குலி. ஆக இப்போது கிடைத்திருப்பது மறு ஜென்மம் அல்ல, மறு மறு ஜென்மம்.

கங்குலிக்கு மட்டும் தமிழ்ப் பாடல்கள் தெரிந்திருந்தால் தென் ஆப்பிரிக்காவில் சேப்பலைப் பார்த்தவுடன் 'என்னம்மா கண்ணு.. சௌக்கியமா' என்று குத்தலாகப் பாடியிருப்பாரோ, என்னவோ!

**- ச.ந.கண்ணன்**



# தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** இந்த வருடத்தின் முதல் ஏழு மாதங்கள் சற்று சுமாரானதாக இருக்கும். எடுக்கும் புதிய முயற்சிகளைச் சற்றுத் தள்ளிப் போடவும். ஆகஸ்ட் முதல் நற்பலன் துவங்க ஆரம்பிக்கும். ஆரோக்கியத்தில் கவனம் அவசியம். படிப்பில் போதிய கவனம் செலுத்தவும். கூட்டாளிகள் விலகிச் செல்ல நேரிடும். திருமணக் காரியங்கள் அதிக பிரயத்தனப்பட்டு முடிவு ஆகும். பூர்வீகச் சொத்துகள் பாகப்பிரிவினை ஏற்படும். வருடத்தின் பின் நான்கு மாதங்கள் அனுகூலமாக இருக்கும். எதிர்பாராத பிரயாண வாய்ப்பு ஏற்படும். தடைப்பட்டு வந்த காரியம் உடன் நடக்கும். மன சலனம் நீங்கும். அதுவரை குரு பகவான்/சனி பகவான்/ ராகு/கேது வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.




**ரிஷபம்:** முதல் எட்டு மாதங்கள் அமோக நற்பலனை அளிக்கும். திருமணக் காரியம் கைகூடும். வீடு/மனை வாங்க நல்ல தருணம். படிப்பில் நல்ல மதிப்பெண்களைப் பெறுவீர்கள். விருப்பப்பட்ட கல்வியைக் கற்பீர்கள். நண்பர் உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். மனத்தில் அசாத்திய துணிச்சல் ஏற்படும். உடன் பிறப்பால் சகாயம் கிட்டும். வியாபாரத்தில் புதிய அபிவிருத்தி உண்டாகும். உத்தியோகத்தில் நல்ல முன்னேற்றம், ஊதிய உயர்வு, இடமாற்றம் ஏற்படும். கடன் தொல்லைகள் தீரும். வழக்கு வெற்றி அளிக்கும். ராகு/கேது வழிபட்டு வருதல் நற்பலனை அளிக்கும்.

**மிதுனம்:** இந்த ஆண்டு பல போராட்டங்களைச் சந்திக்க நேரிடும். தெய்வ பலத்தாலும் ஆத்ம பலத்தாலும் நற்பயனை அடைய நேரிடும். உடல் நிலையில் கவனம் செலுத்தவும். கல்வியில் அக்கறை செலுத்தவும். அவசரப்பட்டு புதிய முயற்சிகளில் ஈடுபடக் கூடாது. திருமணம் கைகூடும். வருடத்தின் கடைசி நான்கு மாதங்கள் நற்பலன் நிறைந்ததாக இருக்கும். சத்ரு தொல்லை நீங்கும். அதுவரை குரு/சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**கடகம்:** முதல் பத்து மாதங்கள் குரு பகவான் மூலம் நற்பலன் நடக்கும். தடை விலகித் திருமணம் கைகூடும். சொத்துகள் வாங்க நேரிடும். நெருங்கிய கூட்டாளிகள் விலகிப் போவார்கள். உடல்நிலையில் கவனம் செலுத்தவும்.

# ஆங்கிலப் புத்தாண்டு பலன்கள் 2007

ஆகஸ்ட் மாதம் சனி பகவான் நற்பலனை அளிப்பார். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். பதவி உயர்வு கிட்டும். தூரதேச அழைப்பு வந்து சேரும். பொருளாதாரக் கஷ்டங்கள் விலகும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.



**சிம்மம்:** வருடத்தின் முதல் ஏழு மாதங்கள் சற்றுச் சுமாராக இருக்கும். எதிலும் முடிவுக்கு வராதபடி மனக்குழப்பம் இருக்கும்.வேறு வேலைக்கு மாறிப் போகும் சூழ்நிலை உண்டாகும். தொலைதூரப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். பொருளாதார நெருக்கடிகள் உண்டாகும். உடல்நிலையில் கவனம் செலுத்தவும். அதுவரை சனி/ராகு/கேது/குரு வழிபாடு செய்து வரவும்.

**கன்னி:** நன்மையும் தீமையும் கலந்த வண்ணம் இருக்கும். மன தைரியத்தாலும், தன்னம்பிக்கையாலும் சமாளித்து வெற்றி பெறுவீர்கள். மன அமைதி இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். பணக்கஷ்டம் இருக்காது. வருடத்தின் கடைசி நான்கு மாதங்கள் பணவிரயம் ஏற்படும். புதிய முயற்சி சற்றுத் தள்ளிப் போகும். வேலையில் இடமாற்றம் ஏற்படும். குரு

பகவானை வழிபட, நற்பலனை அளிக்கும்.

**துலாம்:** இந்த வருடம் ஆரம்பமே நல்ல யோகமான வருடம் ஆகும். வழக்கு வியாபாரம் வெற்றி அளிக்கும். வராத நிலுவைகள் கைக்கு வந்து சேரும். சொத்துகள் பாகப் பிரிவினை ஆகும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். திருமணக் காரியம் நடக்கும். உடல்நிலை நன்றாக இருக்கும். குழந்தைகள் இடமாறிச் செல்வார்கள். புத்திரப் பாக்கியம் கிட்டும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். கல்வியில் அதிக மதிப்பெண்கள் பெற்று விருப்பப்பட்ட கல்வி கிட்டும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். பணி உயர்வு, பண உயர்வு கிட்டும். வருடத்தில் கடைசி இரண்டு மாதங்கள் சுமாராக இருக்கும். குரு /ராகு/ கேதுவை



வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**விருச்சிகம்:** இந்த வருடத்தின் முதல் எட்டு மாதங்கள் ரொம்ப ரொம்ப அனுகூலமாக இருக்கும். எண்ணங்கள் யாவும் ஈடேறும். பொன், பொருள் சேர்க்கை ஏற்படும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். கல்வியில் அதிக மதிப்பெண் கிட்டும். உடல்நிலை நன்றாக இருக்கும். வீடு மாற்றம், தொழில் மாற்றம் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். மனசலனம் விலகும். வருடத்தின் கடைசி நான்கு மாதங்கள் சற்று மந்தமாக இருக்கும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வரவும்.

**மனசலனம் போகும். சொசைட்டியில் மதிப்பும், மரியாதையும் பெருகும்.**

ராகு/கேது வழிபாடு செய்வீர்.

**தனுசு:** இந்த ஆண்டு முதல் ஏழு மாதங்கள் சற்றுப் பொறுமையுடனும் நிதானத்துடனும் செயல்பட்டால் வரும் இன்னல்களில் இருந்து விடுபடலாம். வாகனத்தில் போகும் போது உஷாராக இருக்கவும். குடும்பத்தில் சுபநிகழ்ச்சி கைகூடும். உடல்நிலையில் கவனம் செலுத்தவும். படிப்பில் அதிக அக்கறை செலுத்தவும். பணப் பற்றாக்குறை தெய்வபலத்தால் சமாளிக்கப்படும். வீடு மாற்றம்/ தொழில் மாற்றம் ஏற்படும். வருடத்தில் கடைசி நான்கு மாதங்கள் நற்பலன் நிறைந்து இருக்கும். தடங்கல் விலகி நன்மைகள் கிட்டும். குரு/சனி வழிபாடு செய்து வரவும்.

**மகரம்:** நன்மை, தீமை கலந்த ஆண்டாக இருக்கும். திருமணம் கைகூடும். வீடு/மனை வாங்க நேரிடும். மன மகிழ்ச்சி கிட்டும். தொழில் துறையில் இடமாற்றம் ஏற்படும். வீடு மாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் சற்று சுமாரான போக்கு நிலவும். யாரிடமும் வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். உடல் நிலையில் கவனம் செலுத்தவும். குரு/சனி/ராகு/கேது வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**கும்பம்:** இந்த வருடம் முதல் எட்டு மாதங்கள் நற்பலன் நிறைந்து இருக்கும். பணக்கஷ்டம் தீரும். வராத நிலுவைகள் வந்து சேரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். மனசலனம் போகும். சொசைட்டியில் மதிப்பும், மரியாதையும் பெருகும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். வீடு/மனை வாங்க நேரிடும். உத்தியோகத்தில் மாற்றம் ஏற்படும். புதிய தொழில் முயற்சி கைகூடும். வேலைப் பளு அதிகரிக்கும். ராகு/கேது/குரு வழிபாடு நற்பயனைத் தரும்.

**மீனம்:** இந்த வருடம் பொன்னான வருடமாகும். திருமணக் காரியம் கைக்கூடும். வேலையில் நற்பெயர் கிட்டும். நீண்டதூரப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி கிட்டும். கல்வி வளம் மேலோங்கும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். சத்ரு தொல்லை நீங்கும். மனசலனம் விலகும். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். சந்தான பாக்கியம் கிட்டும். செலவுகள் சுபமானதாக இருக்கும்.



**பீ**ச்சுக்குப் போனா ஜாலி, பார்க்குக்குப் போனா கும்மாளம், தியேட்டருக்குப் போனா குஷி, ஆனா லைப்ரரிக்குப் போனா...?

'அங்கே நமக்கென்ன வேலை? அது படிப்பாளிங்க போற இடம்'ங்கற எண்ணம் கொண்டவங்க தயவு செய்து அதை மாத்திக்கிட்டு ஒரு தரம் கன்னிமாரா லைப்ரரிக்குப் போயிட்டு வாங்க, பாஸ். 1.21 கோடியைத் தனக்கு அலங்காரம் செய்றதுக்காகச் செலவு செய்ய வச்சுப் புதுப்பொலிவோட மணப்பெண்ணா காட்சியளிக்குது புதுப்பிக்கப்பட்ட கன்னிமாரா.

1890-ல் அப்போதைய சென்னை ஆளுநர் கன்னிமாராவால் அடிக்கல் நாட்டப்பட்டதால்தான் கன்னிமாரான்னு பேர் வச்சாங்களாம்!

1896ல் ஆர்த்தர் எலிபேங்ஹேவ்லாக் கன்னிமாராவைத் திறந்து சிறப்பு செஞ்சிருக்கார். ஆங்கிலோ - சார்சனிக் கட்டடக் கலைப் பாணியில, வல்லுநர் ஹென்றி இர் ஷன் என்பவர் கைவண்ணத்துல உருவாக்கப்பட்டிருக்கு. அன்றைய கட்டுமானச் செலவு 5,75,000 ரூபாய் (புதுப்பிக்க 1.21 கோடி!)!

அரைவட்ட வடிவ வாசல் மண்டபம், அழகான நளினம் வாய்ந்த படிப்பறை, தேக்குமர அலமாரிகள், விதவிதமான பூவேலைப்பாடோடு கூடிய மேற்கூரை. ஆந்திரா விலிருந்து, பக்கிங்காம் கால்வாய் வழியா படகு மூலம் கொண்டு வரப்பட்ட சலவைக் கற்கள் பதிக்கப்பட்டு அன்றைக்குக் கட்டப்பட்ட கன்னிமாராவை










# கண்ணில் நிற்கும் கன்னிமாரா!

அப்படியே இன்னைக்கு மீட்டெடுத்துத் தந்திருக்கிற வல்லுநர்களுக்குக் குஷியா ஒரு சல்யூட் வைக்கணும்.

இந்த நூலகத்துல மின் விசிறிகளோ, மின்விளக்குகளோ கிடையாது. ஆனா போதிய வெளிச்சமும், காற்றோட்டமும் இருக்கற மாதிரி அமைக்கப்பட்டிருக்கிறது ஆச்சரியத்தைத் தருது.

இன்றைக்கு 120 பணியாளருங்க, ஆறு லட்சத்துக்கு மேற்பட்ட புத்தகங்க, நாளொன்றுக்கு ஆயிரத்து ஐந்நூறுக்கும் குறையாத வருகையாளருங்கன்னு ஆயிரக்கணக்கான உறுப்பினர்களைக் கொண்ட கன்னிமாராவும் இனி டூரிஸ்ட் ஸ்பாட்தான்.

- அருணாஸ்

படங்கள் : பொள்ளாச்சி சுந்தரம்

அமரர் கல்கி

மக்டனால்டுக்காவது, சர்ச்சிலுக்காவது, ஹரல்டு லாயிடுக்காவது, ஜலதோஷம் பிடித்தால், இவ்வுலகிலுள்ள ஐம்பதினாயிரம் தினசரிப் பத்திரிகைகளிலும் அது மறுநாளே வெளியாகிறது தெனாலிராமன், இவர்களையெல்லாம் விடப் பெரியவன். ஆகவே, அவனுக்கு எப்போதோ பிடித்த ஜலதோஷத்தைப் பற்றி இப்போது நாம் படிக்க வேண்டியிருக்கிறது.

தெனாலிராமன் சிவபெருமானோடு தான் இரண்டறக் கலந்துவிட்டதாக எண்ணலானான். சிரசிலுள்ள கங்கா நதியானது மண்டை ஓட்டில் தொளை போட்டுக்கொண்டு மூக்கு வழியாகப் பிரவாஹிக்க ஆரம்பித்துவிட்டதென்று கருதினான். மனிதப் பிறவியில் ஜலதோஷத்தைவிடக் கொடிய துன்பம் ஒன்றுமில்லையென்று முடிவு செய்தான். தற்கொலை செய்துகொள்ளலாமா என்று கூட அந்த வேளை நினைத்தான்.

# மீண்டும் மீண்டும் சிரிப்பு!

புவன மாதாவாகிய காளிதேவியைக் குறித்து தெனாலிராமன் கடுந்தவம் புரிந்துகொண்டிருந்தான். கடைசியில் மாதா கருணை கூர்ந்தாள். தனது ஆயிரம் சிரங்களுடன் ஈராயிரம் கரங்களுடனும் பிரசன்னமானாள். அத்தோற்றத்தைக் கண்டதும் தெனாலிராமன் முகத்தில் புன்னகை உண்டாயிற்று. புன்னகை விரைவில் பெருநகையாயிற்று. ஆனமட்டும் அடக்கிப் பார்த்தும் முடியவில்லை. குப்பென்று சிரிப்புப் பீறிக்கொண்டு வந்தது. கலகலவென்று சிரித்தான்.

மாதா கோபங்கொண்டாள். தன் வடிவத்தைக் கண்டதும் தெனாலிராமன் பயபக்தியுடன் பேசவும் நாவெழாமல் திகைத்து நிற்பான் என்று தாய் எண்ணியிருந்தாள். "அடா! ஏன் சிரிக்கிறாய்? உடனே சொல்!" என்று கேட்டாள்.

"அம்மா, மன்னிக்க வேண்டும். ஒரே மூக்குடன் கூடிய எனக்கு ஜலதோஷம் வந்தபோது, நான் பட்டபாடு சொல்ல முடியாதது; உயிரை விட்டுவிடலாமா என்று நினைத்தேன். ஆயிரம் மூக்குள்ள உனக்கு ஜலதோஷம் வந்தால் என்ன செய்வாய் என்று நினைத்தபோது, எனக்கு அடக்க முடியாத சிரிப்பு வந்தது. நீ உயிரைக்கூட விட முடியாதே?" என்றான் தெனாலிராமன்.

காளி மாதா கோபங்கொண்டாள். 'பார்த்தாயா, இவன் நம்மைப் பரிகாசம் செய்தான்' என்று நினைத்தாள். "நீ விகடகவியாகப் போகக் கடவது" என்று சாபங் கொடுத்தாள்.

தெனாலிராமன் மறுபடியும் சிரித்தான். தேவி மீண்டும் சிரிப்புக்குக் காரணம் கேட்டாள்.

"அம்மா! நீ கொடுத்த வரத்தை நினைத்துச் சிரித்தேன். இடம் வலமாகப் படித்தாலும் விகடகவி; வலம் இடமாகப் படித்தாலும் விகடகவி" என்றான்.



மாதா மகிழ்ச்சி கொண்டாள். "நீ அரண்மனை விகடகவியாகக் கடவாய்" என்று வரங் கொடுத்து அந்தர்த்தான மானாள்.

தெனாலிராமன் காளியின் ஆயிரம் மூக்குகளைக் குறிப்பிட்டது ஓர் உயர்தர ஹாஸ்யமென்று பலர் கருதுவார்கள். தேவி அதை அறிந்து அநுபவித்து மகிழாமல் **சாபம்** கொடுக்கிறாள். பின்னால் 'விகடகவி'யைப் பற்றிக் கூறியது ஒரு கீழ்த்தர ஹாஸ்யம். தாய் அதைக் கொண்டு மகிழ்ந்து வரம் அளிக்கிறாள். ஜகன் மாதாவின் சங்கதியே இப்படியானால், கேவலம் நம்மைப் போன்ற மானிடர்களைப் பற்றிக் கேட்பானேன்?



மேற்படி கதையில் ஒரு சிறு மாறுதல் செய்தோமானால், 'ஜகன் மாதாவுக்கு நகைச்சுவை உணர்வு இல்லை'



என்னும் அபகீர்த்தி ஏற்படாமல் தடுக்கலாம். முதலில் கொடுத்ததை **வரம்** என்றும், பின்னால் அளித்ததைச் **சாபம்** என்றும் மாற்றிவிடுங்கள். தெனாலிராமனின் முதல் பதிலில் இருந்த ஹாஸ்ய ரஸத்தை அநுபவித்து மகிழ்ந்த அன்னை, 'நீ விகட கவியாயிருந்து எல்லா மக்களையும் மகிழ்ச்சி செய்வாய்' என்று ஆசீர்வதிக்கிறாள். ஆனால் அடுத்தாற் போல் அவன் ஒரு கீழ்த்தர விகடம் செய்யவே, 'அரண்மனை விகடகவியாகி, நகைச்சுவை இல்லாத இராஜாவுக்கும் பிரபுக்களுக்கும் மத்தியிலிருந்து அவஸ்தைப்படக் கடவாய்!" என்று சபிக்கிறாள்.

**- 'அதிர்ஷ்ட கவசம்'**
**வானதி வெளியீடு**

# திருச்சி சிவா

மாநில இளைஞரணிச் செயலாளர், தி.மு.க.

திருச்சி பெரியார் கல்லூரி. புகுமுக வகுப்பில் சேர்ந்தபோது, எனக்கு அனுபவச் சிறகுகள் முளைக்கத் துவங்கியிருந்தன. கல்லூரி நாட்களில் அன்று முகிழ்த்த நட்புகள் இன்று வரை தொடர்கின்றன. பெரியாரின் கருத்துகள், அண்ணாவின் எழுத்துகள், கலைஞரின் ஆவேசமான பேச்சுகள் முழுமையாக ஆக்கிரமிக்க ஆரம்பித்தன. கல்லூரிப் பருவத்தின் இறுதியில் ஓராண்டு மிசா சிறைவாசம். அந்த ஆறு வருட காலமும் மறக்கக் கூடாதது; மறக்க இயலாதது.

துணிச்சலும், முற்போக்கு எண்ணங்களும் கொண்ட அற்புதமான நண்பர்கள் கிடைத்தனர். அரசியல் ஆர்வம் தீயாய்ப் பற்றிக் கொண்டது. இருப்பினும், மாணவக் குறும்புகள் அவ்வப்போது எங்களிடையே துளிர்த்திருக்கும். ஓடுகிற நகரப் பேருந்தில் உரக்கக் குரலெடுத்துப் பாடுவது, மாலையில் நகர்வலம் வருவது, பிறருக்கு வெறுப்பு ஊட்டாத சேட்டைகள் எனக் குறும்புகள் வெளிப்பட்ட பொழுதுகள்.

என் பள்ளிக் காலத்தில் கிடைக்காத விளையாட்டு வாய்ப்புகள் கல்லூரி மைதானத்தில் அபரிமிதமாகக் கிடைத்தன. மாணவர் பேரவைத் தேர்தல்கள். ஊரில் எங்காவது அநியாயம் நடக்கிறது என்றால் அழைக்காமலே முந்திக் கொண்டு நியாயம் கேட்கச் செல்வது. பையில் பணம் இல்லையென்றாலும் மனசு நிறைய சந்தோஷம் மண்டிக் கிடந்த காலம் அது!

ஆரவாரம் அதிகமில்லாத இரவுப் பொழுதுகளின் கல்லூரித் தேர்வு சமயங்களில் நாங்கள் அடைக்கலமானது தெரு மின்விளக்குகளின் அடியில்தான். ஒவ்வொரு விளக்குக் கம்பத்துக்கும் ஒருவரென வீதி மணலில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருப்போம். நள்ளிரவு நேரங்களில் உறக்கத்தை விரட்ட, எல்லோரும் சேர்ந்து சென்று டீ குடித்து விட்டு வருவோம். எல்லாம் திடீரென ஒரு நாள் முடிந்து போனது.

அவசர நிலை காலத்தில் 1976 ஜனவரி 31, தி.மு.கழக ஆட்சி கலைக்கப்படுகிறது. அப்போது முதுகலை ஆங்கில இலக்கிய இறுதியாண்டு மாணவன் நான். மிசா சட்டத்தின் வாயிலாக கட்சித் தலைவர்கள், முன்னோடிகள், தொண்டர்கள் எனப் பலரும் கைது செய்யப்பட்டனர். கல்லூரி மாணவனாக இருபத்தொரு வயதில் நானும் அப்போது 'மிசா'வில் கைது செய்யப்பட்டேன். ஒரு வருட சிறை வாசம். என்னைவிட இரு மடங்கு வயதான கழக முன்னோடிகள் எனக்குச் சிறைத் தோழர்கள். அவர்கள் என்னை முழு நேர அரசியல்வாதியாக நிலை பெறச் செய்ய அடித்தளமிட்டவர்கள். அரசியல் ஈர்ப்பு எனக்கு அதிகமான பின்னர், நான் எழுதிய ஐ.ஏ.எஸ். தேர்வும் ஒருமுறை கை நழுவிப் போனது.

சிறைவாசத்தின்போது கடைசிப் பருவத் தேர்வுகள் வந்துவிட்டன. பரோலில் கல்லூரிக்குச் சென்று தேர்வு எழுதி வர ஏற்பாடாகியிருந்தது. பலத்த பாதுகாப்புடன் கல்லூரிக்குள் என்னை அழைத்துச் சென்றனர். என்னிடம் நெருங்கிப் பழகிய கல்லூரித் தோழர்கள் எல்லோரும், தொலைவில் மரங்களுக்குப் பின்னால் மறைந்து நின்று பார்த்தனர். தேர்வெழுத தனி அறையொன்றில் அமர்த்தப்பட்டேன். என்னைச் சுற்றிலும் துப்

வாழ்வின் மறக்க முடியாத
நாட்களைப் பற்றிப்
பிரபலங்கள் பேசும் பகுதி

பாக்கி ஏந்திய ஆறு போலீசார் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தனர். ஒரு பறவையைப் போல உற்சாகமாகச் சுற்றி வந்த கல்லூரி வளாகத்துக்குள், இப்படி பலத்த போலீஸ் பாதுகாப்போடு உள்ளே நுழைந்து, ஒரு தீவிரவாதியைப் போல கண்காணிக்கப்பட்டு, பலரும் வேடிக்கை பார்க்கத் தேர்வெழுதி வருகிறோமே என்று நினைத்துப் பார்த்தேன். அன்று இரவு முழுவதும் தூக்கம் தொலைந்தது.

ஆறு வருட கல்லூரி நாட்கள் மட்டுமே இன்னமும் பசுமையாக

# தூக்கம் தொலைந்த இரவு!

எனக்குள் இருக்கின்றன. இப் பொழுது கூட ஏதேனும் சில சமயங்களில் என் மனம் அமைதியை நாடும்போது, பெரியார் கல்லூரி ஆலமரம் எனக்கு நிம்மதியை அளித்து வருகிறது.

சந்திப்பு, படம் :
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**





# போஸ்ட் கார்டு கதைகள்

கடந்த இதழில் வெளியான தலா ரூ.250 பரிசு பெற்ற போஸ்ட் கார்டு கதைகளின் அணிவகுப்பு இந்த இதழிலும் தொடர்கிறது...

## சுத்தி சுத்தி வந்தீக!

பாலா சரவணன்

அந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு மேனேஜர் அதிர்ந்தார். எதிரில் இருந்த ரேகாவைப் பார்த்து, "வாட் இஸ் திஸ்?" என்றார்.



"எனக்கு வந்த கொலை மிரட்டல் சார்."

பார்வையை மீண்டும் கடிதத்தில் பதித்தார், மேனேஜர்.

'அன்புள்ள ரேகாவுக்கு... நீ என்னைக் காதலிக்காமல் கமலேஷைக் காதலிக்கிறாய். உங்கள் இருவரையும் நான் கொல்வேன்.

- இப்படிக்கு நான்.'

"யாரந்த நான்?"

"தெரியலை சார்!"

"நீங்க கமலேஷைக் காதலிக்கிறீங்களா?"

"இல்ல சார். அவர்தான்

---

உள்ளாட்சித் தேர்தலில் அமோக வெற்றி பெற்று கம்பீரமாக நன்றி சொல்லப் புறப்பட்டார் கவுன்சிலர் கோமதியம்மாள்.

வீதியில் வீட்டுக்கு வீடு ஆரத்தி எடுத்தும் பொன்னாடைகளைப் போர்த்தியும் அசத்தினர்.

"இனி நமக்கு நல்ல காலம்தான். தொகுதிப் பிரச்னைகளை நல்லபடியா தீர்த்து வை தாயீ. நீ நல்லாயிருப்பே..." பெரியவர் ஒருவர் நெகிழ்ந்தார்.

வீட்டுக்கு வந்த கோமதியைக் கணவர் சதாசிவம் வரவேற்று, "வாம்மா, ஊருக்கு நன்றி



என் பின்னாடி சுத்திச் சுத்தி வந்தாரு."

கமலேஷ் வரவழைக்கப்பட்டார்.

''நீங்க ஏன் ரேகா பின்னால சுத்தினீங்க? கொலை மிரட்டல் அளவுக்குப் போயாச்சு, பாருங்க."

"நான் ஏதோ சும்மா ஜஸ்ட் டைம் பாஸுக்குச் சுத்தினேன். இது இவ்ளோ சீரியஸா ஆகும்னு நான் நினைக்கல... மன்னிச்சிடுங்க சார்..."

ரேகா உடனே ''தாங்க்ஸ் கமலேஷ்" என்றவள், "உங்களோட கேரக்டர் எப்படின்னு தெரிஞ்சுக்க நானும், என் தோழியும் சேர்ந்து போட்ட டிராமா தான் இந்தக் கொலை மிரட்டல் கடிதம்!" என்றாள்.

கடுப்பான மேனேஜர், மூவரையும் சஸ்பெண்ட் செய்தார்.






# பொருத்தம்

ராம் ஆதிநாராயணன்

"டாடி! ஸ்கூல்ல ஆண்டுவிழா ஃபங்க்ஷன்ஸ் வருது. அதுல நான் கட்டுரைப் போட்டியில் கலந்துக்கப் போறேன்..." ஆர்வமாகச் சொன்னாள் மகள் சீதா.

"ஆஹா! வழக்கம்போல என்னை எழுதித் தரச் சொல்லி டார்ச்சர் பண்ணிடுவியே...!" என்றான் மனோகர்.

"நோ டாடி! நானே எழுதிக்கிறேன்!"

''வெரிகுட்...! நல்ல இம்ப்ரூவ்மெண்ட் செல்லம்! கீப் இட் அப்!"

''இம்ப்ரூவ்மெண்ட்தான்... அதேசமயம் நீங்க எழுதித் தந்தாலும் பொருத்தமா இருக்காது!"

"ஏன்டா கண்ணா?"

''கட்டுரைப் போட்டியோட தலைப்பு 'தாய்ப் பாசம்'... பாட்டிய முதியோர் இல்லத்துல விட்டுட்டு வந்திருக்கிற உங்களுக்குத் 'தாய்ப் பாசம்' பத்தி எழுத வருமா..."

சிலையாக நின்றான் மனோகர்.

# பொம்மை

பா.து.பிரகாஷ்



சொன்ன உனக்கு நான் சொல்றேன்... ரொம்ப நன்றிம்மா. இதோடு உன் வேலை முடிஞ்சது. இனி நான் பார்த்துக்கிறேன். சமையலறைக்குப் போய் வேலையைப் பாரும்மா...!'' என்றார்.

பொம்மையாகத் தலையாட்டி விட்டுச் சென்றார் கவுன்சிலர் கோமதியம்மாள்.

# வசந்தபாலன்

"வெயில் கற்பனைக் கதை இல்லை. என் வாழ்க்கையில் ஏற்பட்ட அனுபவங்களைத்தான் திரைக்கதையாக்கினேன்'' என்கிறார் இயக்குநர் வசந்தபாலன்.

வெயில் படத்தின் கதை நடக்கும் விருது நகர்தான் இவருக்கும் சொந்த ஊர். அங்கே பி.எஸ்ஸி. பாட்டனி படிப்பை முடித்த கையோடு சினிமா கனவுடன் சென்னைக்கு வந்துவிட்டார். சென்னைக்கு வந்துவிட்டாலும் எப்படி சினிமா என்ற கோட்டைக்குள் நுழைவது என்று தெரியவில்லை. கேமரா மேன் ஆகலாமா, பாட்டு எழுதலாமா, எடிட்டிங் கற்றுக் கொள்ளலாமா என்று பல்வேறு சிந்தனைகள்.

''தயாரிப்பாளர் கே.டி.குஞ்சுமோன், இயக்குநர் பவித்ரனிடம் உதவி இயக்குநராக இருந்த ஷங்கருக்கு 'ஜென்டில்மேன்' படத்தை இயக்க வாய்ப்புக் கொடுத்த போது, அவரிடம் உதவி இயக்குநராகச் சேர வாய்ப்புக் கிடைத்தது தான் என் வாழ்க்கையில் ஏற்பட்ட திருப்பு முனை. ஷங்கரிடம் ஜென்டில்மேன், காதலன், இந்தியன், ஜீன்ஸ் ஆகிய நாலு படங்களில் பணியாற்றினேன்'' என்கிறார் வசந்தபாலன்.

• வசந்தி பாலாஜி

# "கண்ணீர் விட்ட




''காதலன்' படத்தில்... கவர்னர் கிரிஷ் கர்னார்ட், காசியில் இறந்தவர்களுக்குப் பிண்டம் வைக்கும் காட்சி. அந்தக் காட்சிக்கு போலீஸ்காரர்களாக நடிக்க இருபது துணை நடிகர்களை ஏற்பாடு செய்யும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தார் இயக்குனர். நான் ஷூட்டிங் தினத்துக்கு

முன்னாலேயே காசிக்குப் போய் அங்கேயே போலீஸ்காரர்களாக நடிக்க ஆள் தேடினேன். நாலு நாட்கள் முயன்றும் ஆட்கள் கிடைக்கவில்லை. ஷூட்டிங்குக்கு முதல் நாள் இயக்குநர் காசியில் வந்து இறங்கியதும் விஷயத்தைச் சொன்னேன்.' ஏதாவது செய். நாளைக்கு ஷூட்டிங் ஆரம்பிக்கும்போது இருபது போலீஸ்காரர்கள் அங்கே இருக்க வேண்டும்' என்று சொல்லிவிட்டார். ராத்திரி முழுவதும் காசி தெருக்களில் அலைந்து திரிந்தேன்.

மறுநாள் டைரக்டர் ஷூட்டிங்குக்கு வந்தபோது இருபது போலீஸ்காரர்கள் ரெடியாக இருந்தார்கள். காட்சியை எடுத்து முடித்துவிட்டு, என்னைக் கூப்பிட்டுப் பாராட்டினார். 'எப்படி ஆட்களை ரெடி பண்ணினாய்?' என்று கேட்டார். 'இரவு காசி நகரத்தின் தெருக்களில் திரிந்தபோது சட்டென்று ஒரு ஐடியா வந்தது. அங்கிருந்த ஒரு பிச்சைக்காரரிடம், 'நூறு ரூபாய் தருகிறேன்; போலீஸ் உடை போட்டுக் கொண்டு ஷூட்டிங் ஸ்பாட்டில் நிற்கிறாயா?' என்று கேட்டேன். சம் மதித்தார். மொத்தம் இருபது பேர் வேண்டும் என்றேன். அவரே அழைத்துக் கொண்டு வந்துவிட்டார். எல்லாருக்கும் இரவோடு இரவாக தாடியை மழித்து, காலையில் இங்கே கொண்டு வந்து நிறுத்திவிட்டேன்' என்றேன். டைரக்டர் முகத்தில் சந் தோஷம்!

# ஷங்கர்...!"

டைரக்டர் ஷங்கரின் அஸிஸ்டென்ட் என்பது எந்த ஒரு தயாரிப்பாளரையும் எளிதில் அணுக விசிட்டிங் கார்டாகப் பயன்பட்டது என்றாலும், பல தயாரிப் பாளர்களை அணுகியும் எனக்குப் பட வாய்ப்புக் கிடைக்கவில்லை. சோர்ந்து போன நான், ஒரு நாள் 'ஏன் நமக்கு யாரும் இயக் குனர் வாய்ப்பு தர முன்வரவில்லை?' என்ற கேள்விக்கு விடை காண முற்பட்டேன். நீண்ட யோசனைக்குப் பிறகு எனக்குக் காரணம் புரிந்தது. நான் சொன்ன கதைகள் எல்லாமே, 'ஷங்கர் கதைகள் பெரிய பட் ஜெட் படங்களுக்கே ஏற்றவை. ஷங்கர் இந்த ரகப் படங்களில் முத்திரை பதித்த இயக்குனர்; நான் புதிய இளைஞன். என்னை நம்பி யார் பெரிய பட்ஜெட்டில் முதலீடு செய்ய முன்வருவார்கள்!'

அதன்பின் சிறிய பட்ஜெட் கதை ஒன்றை கவிதாலயாவில் சொல்ல, அது ஓ.கே. ஆகி, நானும் இயக்குநரானேன். ஆனால் 'ஆல்பம்' எதிர்பார்த்த அளவு வெற்றி பெறவில்லை. மீண்டுமொரு தொய்வு. இதற்கிடையே விருதுநகரில், என் தம்பி உள்ளூரிலேயே பிசினஸ் ஆரம்பித்து, தங்கைகளைப் படிக்க வைத்து, குடும்பத் துக்கு வெகு அனுசரணையாக இருந்தான். நான் சென்னைக்கு வந்தபின், குடும்பத்தி லிருந்து விலகி வந்துவிட்டதாக உணர்ந் தேன். என் தங்கை திருமணத்தை அவன் முன்நின்று நடத்தி வைக்க, நான் ஏதோ ஒரு மூன்றாம் மனிதரைப் போல உணர்ந்தேன். சென்னை திரும்பிய பின், என் வாழ்க்கை யையும் என் தம்பியின் வாழ்க்கையையும் ஒன்றாக நினைத்துப் பார்த்தேன். அதில் அருமையான ஒரு கதை இருப்பதாக எனக்குத் தோன்றியது.

இயக்குநர் ஷங்கரிடம் அந்தக் கதையைச் சொன்னேன். கதையை முடித்தபோது அவர் எமோஷனலாகிவிட்டார். அவரது கண்களின் ஓரத்தில் கண்ணீர் கசிவதை நான் கவனித்தேன். அவரின் கடைக்கண்ணில் கண்ட ஒரு துளிக் கண்ணீரை இன்று படம் பார்க்கிற ரசிகர்களின் கண்களிலும் நான் காண்கிறேன்'' என்கிறார் வசந்தபாலன்.

- மௌலி



# ஜகத்குரு

# ஆசை!

ஆசை என்ற ஒரே ஒரு சத்ருவை எப்படியோ ஒரு தினுஸில் எப்பாடு பட்டாவது நாம் ஒழித்துக் கட்டிவிட்டால் போதும் - அப்புறம் நாம் ராஜாதான். ராஜா என்றால் இந்த உலகத்து ராஜா இல்லை. ஆசை, தொல்லை கிட்டேயே வராத சாஸ்வத சாந்தத்தை உடைய ராஜா.

பல நூறாயிரம் தகாத செயல்களை ஒவ்வொன்றாக அடக்கப் பார்த்துப் பிரயோஜனமில்லை. அது முடியாத காரியம். ஆசையால் அவை கிளைகள் என்றால் அவற்றுக்கு வேராக உள்ள ஆசை என்ற ஒன்றை வெட்டிவிட்டால் போதும்.

கறையான் புற்று வைக்கிறது. அதை உடைக்க உடைக்க - புற்று மறுபடி மறுபடி கிளம்பிக்கொண்டிருக்கிறது. இதற்கு முடிவு எப்படி? தாய்ப்பூச்சி இருக்கிற வரைக்கும் அது கொஞ்சம்கூட அலுக்காமல் சலிக்காமல் இப்படிப் புற்று வைத்துக் கொண்டேதான் இருக்கும். அதைத் தேடிக் கண்டுபிடித்து 'ஸம்ஹாரம்' பண்ணினால்தான் அப்புறம் புற்று புறப்படாமலிருக்கும். இப்படியே சகல கஷ்டத்துக்கும், சகல தகாத செயல்களுக்கும் தாய்ப்பூச்சியாயுள்ள ஆசையை அழிக்காமல், அந்தக் கஷ்டம் ஒவ்வொன்றையும் தவிர்க்கப் பாடு பட்டால் அவ்வளவும் பலன் இல்லாமல் தான் போகும். Cause - ஐ (காரணத்தை) அழித்தால் மட்டுமே effects - ஐ (விளைவுகளை) நிரந்தரமாக அழிக்க முடியும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்




அருள்வாக்கு



# சுவாமி சுத்தானந்தா 10

எந்தச் செயலையும் நம்மிடமிருந்து துவங்குவதற்கு முன் தவிர்க்கவியலாமல் கடவுளிடம் ஏன் செல்கிறோம், அவர் ஏன் நம் நண்பர் என்பதைப் பார்ப்போம்.

'சிவ அபராத க்ஷமா ஸ்தோத்திர'த்தில் ஆதிசங்கரர் வெகு அழகாக எழுதுகிறார்... அதாவது, 'கடவுளே... இந்த ஸ்தூல சரீரத்தைவிட்டு ஆயுள் குறைந்து வருகிறது... நான் கவனித்துக் கொண்டிருக்கையிலேயே ஒவ்வொரு கணமும் எனக்கு வயதாகிக் கொண்டு வருகிறது. ஒவ்வொரு நாளும் இளமை தேய்கிறது. கடந்துபோன நாட்கள் ஒரு போதும் திரும்பி வாரா. படைப்பு முழுவதையுமே காலம் ஆக்கிரமித்திருக்கிறது... எல்லாமே மாறியும் மறைந்தும் வருகின்றன. செல்வமோ வந்து வந்து மீளும் அலைபோல இடமற்றது. ஸ்திரமில்லாதது. வாழ்க்கையே மெலிந்தது, நிரந்தரமற்றது, மின்னல் போன்றது.'

இப்படிப் பல நிரந்தரமற்றவை இருக்கும்போது, சக்தியளிக்கும் ஒன்றைத் தேடி எல்லோரும் போவது இயற்கையே. சாதாரண மனிதன், பற்றிக் கொள்ளத் தோதான ஒன்றைத் தேடிப் போகிறான். ஓர் ஆண் அல்லது பெண்ணுடனான தொடர்பு, தன் பிரச்னையைத் தீர்ப்பதாக ஒருவர் கருதலாம். மருத்துவ உதவியால் தன் சிக்கல் மறையுமென்று மற்றுமொருவர் சொல்லலாம்.

இறப்பில் இரண்டு வகையுண்டு. அவை : உடலின் இறப்பு, உணர்வின் இறப்பு உடல் சார்ந்ததென்றால், மருத்துவ அறிவினால் ஓரளவுக்கு அந்தப் பிரச்னையைத் தீர்த்துவிடலாம். ஆனால் உணர்வின் இறப்பை - அதாவது நமது அன்பு, பாசம், காதல், ஏமாற்றம், திருப்தி, வெறுமை, வெறுப்பு, பொறாமை போன்றவற்றின் பாதிப்பை மருத்துவ அறிவினால் தீர்க்க முடியாது. தன்னைப் பற்றி அறிந்து கொள்ளவும், இப்பிரச்னைகளைத் தீர்க்கவும் ஆத்ம ஞானம் உதவுகிறது; என்றாலும், சரீர அழிவினால் ஏற்படும் பிரச்னையைத் தீர்க்க அதனால் முடியாது.

ஆத்ம ஞானத்தால் அத்தனை பிரச்னைகளையும் தீர்த்துவிடலாம் என்று சொல்லக் கூடாது. நாம் அழிவற்றவர்கள் என்பதைக் கண்டுபிடிக்க உதவி செய்து, அழிவையும் நிரந்தரத்தையும் பற்றிய பிரச்னையைத் தீர்க்க அது உதவலாமே தவிர, ஸ்தூல சரீரத்தின் அழிவை அதனால் தடுக்க முடியாது. நோயையும் அதனால் குணப்படுத்த இயலாது. நோயைக் குணப்படுத்த மருத்துவ அறிவுதான் தேவை. உணவு

என் கடவுள்...என் தோழன்...

தமிழ் வடிவம் : சிவசங்கரி

உட்கொள்ள, செல்வத்தைத் தேட, இதர பொருள் சார்ந்த வளர்ச்சிகளுக்கெல்லாம் குறிப்பிட்ட விஞ்ஞான அறிவே நமக்குத் தேவை. நமக்கு அறிவு முக்கியம். இதன் மூலம் நமது அழிவைத் தள்ளிப்போட லாமே தவிர, நிரந்தரத்தை அது நமக்குத் தராது.

அழியாமல் இருக்க வேண்டுமானால், 'நான்' என்பதைக் கவனிக்க வேண்டும். 'நான்' என்பதை நன்கு உணர்த்தி மரண பயத்தைப் போக்கும் மெய்யறிவே ஆத்ம ஞானம். நமக்கு விஞ்ஞான அறிவு, மெய்ஞான அறிவு இரண்டுமே தேவை. வெறும் பிரார்த்தனை மட்டுமே நோயைக் குணப்படுத்தாது. நம்மை நோய் தாக்கும் போது, நாம் நிராதரவாகி, கடவுளைப் பிரார்த்திக்கிறோம். ஆனால், அது எந்தக் கடவுள் என்று நமக்குத் தெரியாது. அதனால்தான், மருந்தைக் கண்டுபிடிக்கும் மனிதர் அக்கணமே கடவுளாகிவிடுகிறார். நாம் உடனே அவரைத் தேடிச்சென்று நிவாரணம் பெறுகிறோம். அதற்குப் பிறகு கடவுளைப் பிரார்த்திப்பதில்லை! என்றாலும், அதுவெறும் உடல்சார்ந்த நிவாரணம்தான்!

அச்சம், வெறுப்பு, பொறாமை போன்றவற்றைச் சற்று கவனிப்போம். பார்க்கலாம். சாதாரணமாக இளமைப் பருவத்தில், வாழ்க்கையை விளையாட்டாக எடுத்துக் கொள்வதால், இறப்பைக் குறித்த பயம் இல்லாததால், ஒரு வகையான பாசாங்குத்தன மான, செயற்கையான தைரியம் நிலவுகிறது. இதன் காரணமாக, மிகுந்த துணிச்சலோடு, தைரியத்தோடு காணப்படும் இளைஞன், காதலை ருசி பார்த்து, அந்த உறவினால் இடிந்து போகும்போது, அவன் பதினேழு வயதிலேயே முதுமையடைந்துவிடுகிறான். மனதளவில் இடிந்து போய், தன்னம்பிக்கை மறைந்து, தனிமை அவனை ஆட்கொள்கிறது. அவன் பெரும் இலட்சாதிபதியாக, வசதியில் செல்வச் சீமானாக இருக்கலாம். ஆனால், மனதளவில் தொய்ந்துபோய், ஏழையாகிவிடுகிறான். 'நான்' என்பது இந்த உணர்வு ரீதியான இறப்பை அனுபவிக்கிறது. உணர்வுகளின் இறப்பிலிருந்தும், பல்வகை அச்சங்களிலிருந்தும் மீண்டுவர, **நம்மை அறிந்து கொள்ளுதல்** மிக முக்கியம்.

இதற்கு இருவகையான ஆய்வுகள் செய்யப்பட வேண்டும் - முதலில், கண்ணுக்குத் தெரியும் பொருள் சார்ந்த உலகை ஆராய வேண்டும். நாம் வளர்ந்து வந்தபிறகுதான் உடலைப் பற்றிய பிரக்ஞை நமக்கு உண்டாகிறது. என்ன




# அந்த ஒரு கணம்..!

# எழுதுங்க காதல் ஹைக்கூ!

## பரிசு ரூ.2000/-

**தேவை, காதல் ஹைக்கூ.**

மூன்று வரிகளுக்கு மிகக் கூடாது. ஓர் அஞ்சலட்டையில் ஒரு ஹைக்கூ மட்டுமே. சிறந்த எட்டு ஹைக்கூக் களுக்குத் தலா ரூ 250/- பரிசு. கடைசி தேதி: 8.1.2007. ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

---

நடக்கிறது என்பது குழந்தைப் பருவத்தில் தெரிவதில்லை... என்றாலும், சூரிய உதயம், சூரிய அஸ்தமனம், நட்சத் திரங்கள், கோள்கள், மரங்கள், செடி கள், விலங்குகள், பூக்கள் - என்று எல்லாவற்றைப் பற்றியும் மிகுந்த ஆர்வம் உண்டாகிறது. புறவுல கினால் குழந்தை கிளர்ச்சியுறுகிறது. தனக்குள் கணையம், இருதயம், நுரையீரல் போன்றவை இருப்பதை உணராததைப் போலவே, கோபம், வெறுப்பு, பொறாமை என்ற உணர்வுகளையும் குழந்தைப் பருவம் இனம் காண்பதில்லை.

ஆக, புறவுலகைப் பற்றின நமது ஆர் வம் பிறக்கும்போதே நமக்குள் இருப்பது தான். அறிவைத் தேடிக் கொள்ளவும், விவரங்களைச் சேகரிக்கவும் துவங்கு கிறபோது, நாம் மிகச் சிறியவர்கள், இந்தப் பரந்த பிரபஞ்சத்தில் கண் ணுக்கே தெரியாதவர்கள் என்று உணர் கிறோம். அப்படி உணரும்போதுதான், நிராதரவான உணர்வும் நமக்கு ஏற்பட்டு விடுகிறது. இப்படிப்பட்ட நிராதரவான உணர்வு துவங்கும் கணத்தில்தான் நம்மைப் பற்றி நாம் அறிய முயல்கிறோம். அதுவே ஆத்ம ஞானம்!

(தொடரும்)



''நான் இங்க ஒருத்தன் கழுதை மாதிரி கத்திட்டிருக்கேன்... நீ அங்க என்ன பண்ற...?''

''உங்களுக்கு பேப்பர் மசாலா பண்ணிட்டு இருக்கேங்க..''

- வி.சாரதி டேச்சு






# திருத்தியமைக்கப்பட்ட தேசிய காசநோய் தடுப்புத் திட்டம், தமிழ்நாடு

**காச நோய்க்கான அறிகுறிகள் :**



3 வாரங்களுக்கு மேல் தொடர்ந்து இருமல்



மாலை நேரக் காய்ச்சல்



எடை குறைதல்



பசியின்மை



நெஞ்சு வலி



நேரடி குறுகிய கால சிகிச்சை (DOTS) முறை : காச நோயைக் குணப்படுத்த சிறந்த வழி (காச நோயைக் கட்டுப்படுத்தும் தேசியத் திட்டம்).

- இந்தியாவில் மூன்று நிமிடங்களில் இரு காசநோயாளிகள் மரணமடைகிறார்கள்.
- மற்ற நோய்களால் இறப்பவர்களின் எண்ணிக்கையை விட, காசநோயால் இறப்பவர்களின் எண்ணிக்கை அதிகம்.
- வருடத்திற்கு சுமார் 18 இலட்சம் மக்கள் காசநோயால் பாதிக்கப்படுகின்றனர். அதில், சுமார் 8 இலட்சம் மக்கள், சளியில் கிருமியுடன் டி.பி. நோயை பரப்பும் தன்மையுடையவர்களாக உள்ளனர்.
- கண்டுபிடிக்கப்பட்ட ஒரு காசநோயாளி முறையான சிகிச்சை எடுத்துக்கொள்ளாவிட்டால், அவர் மூலம் புதிதாக 10 லிருந்து 15 காசநோயாளிகள் உருவாகும் அபாயம் உள்ளது.
- காசநோய்க்கு எல்லா அரசு ஆரம்ப சுகாதார நிலையங்களிலும், துணை சுகாதார நிலையங்களிலும், அரசு மருத்துவமனைகளிலும், பரிசோதனையும், உலக தரம் வாய்ந்த மருந்துகளும் இலவசமாக வழங்கப்படுகிறது.
- காசநோயாளி, மருத்துவர், டாட்ஸ் பொறுப்பாளர் ஆகியோரின் கூட்டு முயற்சியால் காசநோயற்ற சமுதாயத்தை உருவாக்கலாம்.

**காசநோயற்ற சமுதாயத்தை நோக்கி விறு நடை போட உதவுங்கள்!**

பொது நலன் கருதி வெளியிடுவோர்:

மாநில காசநோய் தடுப்புச் சங்கம், சென்னை-600 006.

Visit us at: www.tn.gov.in / www.southindia.com

செய்தொ.இ/1557/வரைகலை/2006

# மருதன்

ஈகுவாடார் நாட்டின் துணை அதிபராக இருக்கிறார் லெனின் மொரேனோ. ஒன்பது ஆண்டுகளுக்கு முன்னால் இவருக்கு உயிர் போய் உயிர் வந்தது. பிரெட் வாங்குவதற்காகக் கடைக்குப் போனார். பின்னாலிருந்து துப்பாக்கி வெடித்திருக்கிறது. திரும்பிப் பார்ப்பதற்குள் சுருண்டு விழுந்துவிட்டார்.

அவசர அவசரமாக மருத்துவமனைக்குக் கொண்டு போனார்கள்.



முதுகெலும்பில் பலத்த அடி. இனி தள்ளு வண்டியில்தான் கொஞ்ச காலத்துக்கு வாழ்க்கையைத் தள்ள வேண்டும். பேசாமல் உயிரே போயிருக்கலாம் என்று நினைத்துக் கொண்டார் மொரேனோ. ஆயிரம் குண்டூசிகள் ஒன்றாகக் குத்துவது போல் இருந்தது.

யதேச்சையாக மருத்துவமனைக்கு வந்த தெரிந்தவர் ஒருவர், மொரேனோவிடம் பேச்சுக் கொடுத்திருக்கிறார்.

"நண்பா, நீ ஏன் சிரிப்பு சிகிச்சை எடுத்துக்கக் கூடாது?"

நின்று நிதானமாக அவரைப் பார்த்து முறைத்திருக்கிறார் மொரேனோ.

"ஏம்ப்பா, என்னைப் பார்த்தா உனக்கு எப்படி இருக்கு?"

அவர் புன்னகை செய்து "உன்னை விட மோசமான நிலைமையில இருக்கிற ஆளுங்க எல்லாம் விழுந்து விழுந்து சிரிக்கிறாங்க. உனக்கென்ன? சரி சரி வா. நாம இப்பவே கிளப்புக்குப் போகலாம்."

'இவருக்கு என்ன பைத்தியமா!' என்று மனத்துக்குள் சபித்தபடி, வேறு வழியில்லாமல் அவருடன் போயிருக்கிறார் மொரேனோ.

கிளப் என்று அவர் சொன்ன இடம் மிகச் சாதாரணமாகத்தான் இருந்திருக்கிறது. கும்பல் கும்பலாக யார் யாரோ வந்திருந்தார்கள். குசுகுசுவென்று ஏதேதோ பேசிக் கொண்டார்கள். பிறகு, கெக்கே பிக்கே என்று சிரிப்பு.

எரிச்சலாக வந்தது மொரேனோவுக்கு. துப்பாக்கிக் குண்டே தேவலாம்போல் இருந்தது. சிறிது நேரம் கழித்து, சரி, அப்படி எந்த அமர காவியத்தைப் பற்றி பேசிக் கொள்கிறார்கள் என்று காது கொடுத்துக் கேட்டிருக்கிறார். சபலம் தட்டியிருக்கிறது. 'அட இது புது ஜோக்கா இருக்கே...' போனால் போகட்டும் என்று கொஞ்சூண்டு கால் இன்ச்சுக்குப் புன்னகை செய்திருக்கிறார்.

இன்னொரு ஜோக் சொல்லியிருக்கிறார்கள். இதற்கு அரை இன்ச் சிரித்திருக்கிறார். பிறகு, இன்னொன்று. இந்த முறை ஒரு இன்ச். இன்னொன்று. இரண்டு இன்சஸ். கால் மணி நேரத்துக்கு மேல் அவரால் தள்ளு வண்டியில் உட்கார முடியவில்லை. பயங்கர வலி. முதுகெலும்பு வலி அல்ல; வயிற்று வலி! சிரித்துச் சிரித்து வயிறு புண்ணாகிப் போனதால் வந்த வலி.

# எத்தனை இன்ச் சிரிக்கலாம்?

ருசி கண்ட பூனையாகிப் போனார் மொரேனோ. தினமும் அந்தச் சிரிப்பு க்ளப்புக்கு ஆஜர். வலி? அது கிடக்கட்டும். பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம். இப்படித் தேறியவர்தான் இப்போது நட்டு வைத்த கல் போல் நன்றாக இருக்கிறார். 'சிரித்தேன். அதனால் தேறினேன்' என்கிறார் புன்னகையுடன்.

தற்போது ஈகுவாடார் முழுவதும் சிரிப்புச் சிகிச்சையின் மகத்துவத்தைச் சுடச்சுட பரப்பிக் கொண்டிருக்கிறார். காலையில் எழுந்து காபி குடித்த கையோடு எல்லோரும் அரை மணி நேரம் விழுந்து விழுந்து சிரிக்க வேண்டும். மீறினால் சிறை - இப்படி ஓர் உத்தரவுதான் பாக்கி.

ரத்த அழுத்தம் குறைகிறதாம். சகட்டு மேனிக்கு டென்ஷனை ஏற்றும் பொல்லாத ஹார்மோன்கள் வாலைச் சுருட்டி உட்கார்ந்து கொள்கின்றனவாம். நோய் எதிர்ப்புச் சக்தியை அதிகரிக்கிறதாம். போதாது?

கேலி, கிண்டல், நையாண்டி, குறும்பு, வம்பு, தும்பு... இவை எல்லாமே மிகவும் ஆரோக்கியமான விஷயங்கள். பேருந்தில் செல்லும் பெண்களிடம் மட்டும்தான் இவற்றைச் செய்யக்கூடாது. மற்றபடி ஆபீஸில், வீட்டில் என்று எல்லா இடங்களிலும் தாராளமாகக் கடைபிடிக்கலாம். ஆனால் ஒரு விஷயம். நீங்கள் சிரிக்க வேண்டும். மற்றவர்களும் சிரிக்க வேண்டும்.

உம்மென்று முகத்தை எப்போதும் தூக்கிவைத்துக் கொண்டிருப்பவர்களை விட எப்போதும் சிரித்த முகமாக இருப்பவர்களுக்கு உடல் தெம்பாக இருப்பதாகச் சொல்கிறார்கள். இளிச்சவாய் என்று பிறர் கேலி செய்தாலும் பரவாயில்லை; பெரிதாக எடுத்துக் கொள்ளாதீர்கள். அதற்கும் ஒருமுறை சிரித்துவிட்டால் போகிறது.

'ஒரு நாளைக்குக் குறைந்தது பதினைந்து நிமிடங்கள் (விடாமலும் விட்டு விட்டும்) சிரித்தால் திடகாத்திரமாக இருப்பீர்கள்' என்கிறார் மைக்கேல் மில்லர். மேரிலேண்ட் பல்கலைக்கழகத்தில் பணியாற்றுபவர். ஒரு பேச்சுக்காகத்தான் பதினைந்து நிமிடங்கள் என்று சொல்லியிருக்கிறார். பதினாறாவது நிமிடம் தொடங்கி முகத்தில் கடுகு வெடிக்க வேண்டும் என்று கட்டாயமில்லை!





# பட்டுக்கோட்டை பிரபாகர்

# 23

## உபாயம்

போனில் தெரிவித்த - குறிப்பிட்ட சவுக்குத் தோப்புக்குள் தன் பைக்கைச் செலுத்தினான் குமரன்.

நிலா வெளிச்சம் மங்கலாக இருந்தது. பைக்கின் வெளிச்சம் இருட்டைத் துளை போட்டு வழி ஏற்படுத்தியது.

தூரத்தில் ஆம்புலன்ஸ் வண்டி தெரிந்தது. வண்டிக்கு வெளியில் மங்கி குல்லாய் அணிந்து, முகத்தை மறைத்து கர்ச்சீப்பும் கட்டிய இரண்டு பேர் நிற்பதும் தெரிந்தது.

முப்பதடி தூரத்தில்... "குமரன்... அங்கேயே நிறுத்து" என்று உத்தரவான குரல் வந்ததும், பைக்கை நிறுத்தினான் குமரன்.

அடுத்து வந்த உத்தரவுக்கும் கட்டுப்பட்டான்.

"ஒரு கோடி கொண்டு வந்திருக்கே இல்லே?"

"ஆமாம். இந்தப் பெட்டியில இருக்கு."

"அந்தப் பெட்டியை எடுத்துத் தரையில வை."

"சரி."

கட்டியிருந்த நைலான் கயிற்றை அவிழ்த்து அந்தப் பெட்டியை எடுத்து தரையில் வைத்தான்.

"மஞ்சரி எங்கே?" என்றான் குமரன்.

"வண்டிக்குள்ளே. பெட்டியை எடுத்து பணத்தைச் சரி பார்த்ததும் இறக்கி விடறோம்."

கையில் துப்பாக்கி ஏந்தியபடி ஆகாஷ் நிற்க... கஜா மெதுவாக அந்தப் பெட்டியை நோக்கி வந்தான்.

அதே சவுக்குத் தோப்புக்குள் இருட்டுக்குள் பதுங்கியிருந்த இன்ஸ்பெக்டர் தியாகு சப்-இன்ஸ்பெக்டர் முருகு பாண்டியன் இரண்டு பேரின் கைகளிலும் தயார் நிலையில் ரிவால்வர்கள் இருந்தன.

கிசுகிசுப்பான குரலில் பேசிக் கொண்டார்கள்.

"செக்போஸ்ட்ல பார்த்த கான்ஸ்டபிள், டிரைவரைத் தவிர, பின்பக்கம் ஒருத்தன் இருந்ததாச் சொன்னார். அந்த ரெண்டு பேர் இவங்களாதான் இருக்கணும் சார்."

"அப்படித்தான் நானும் நினைக்கிறேன்."

"அப்போ ஆம்புலன்சுக்குள்ளே மஞ்சரி மட்டும்தானே இருக்கணும்?"

"ஆமாம்."

"இந்த ரெண்டு பேரையும் கால்லுக்குக் கீழே குறி தவறாம சுட்டு மடக்கிப் போட்டோம்னா மேட்டர் முடிஞ்சது சார்."

"அவசரப்படாதீங்க. ஒருத்தன் பெட்டி எடுக்க வர்றான். இன்னொருத்தன் கையில துப்பாக்கி இருக்கு. கொஞ்சம் வெய்ட் பண்ணலாம்."

கஜா குமரன் நின்றிருந்த இடத்துக்கு வந்து, தரையில் அவன் வைத்த பெட்டியை எடுத்துக் கொண்டு மீண்டும் ஆகாஷை நோக்கிச் சென்றான்.

விநாடிகள் பதற்றத்துடன் கரைந்தன.

கஜா ஆகாஷை அடைந்ததும் தன் செல்போன் ஒளியால் பெட்டியின் பூட்டைப் பார்த்தான் ஆகாஷ்.

"நம்பர் லாக் சிஸ்டமா? பெட்டியைத் திறக்கறதுக்கு என்ன நம்பர்?"

"சொல்றேன். மஞ்சரியை முதல்ல



எனக்குக் கண்ல காட்டு. அவளைக் கீழே இறக்கி விடு" என்றான் குமரன்.

"பணத்தைச் சரி பார்த்துட்டு இறக்கி விடறேன்னு சொன்னனே..."

"நீ என்ன அரிச்சந்திரனா? உன் வார்த்தையை நான் எப்படி நம்பறது? மஞ்சரியைக் கண்ல பார்த்தாகணும் நான். அப்புறம்தான் நம்பர் சொல்வேன்."

"ஏய்! நீ சொல்லலைன்னா இந்தப் பெட்டியோட பூட்டைத் திறக்க முடியாதா?

இரண்டு குண்டுகளும் கஜா மற்றும் ஆகாஷின் முழங்கால்களைக் குறி வைத்துச் சுழன்று வந்தன.

ஒரு குண்டு குறி தவறாமல் கஜாவின் முழங்காலில் இறங்க... அவன் ரத்தம் தெறிக்க, எகிறி, அலறியபடி விழுந்தான்.

ஒரு இன்ச் குறி தவறியது மற்றொரு குண்டு.



என் துப்பாக்கிலர்ந்து ஒரு குண்டு வேஸ்ட் பண்ண வைக்கிறே..."

ஆகாஷ் அந்தப் பெட்டியைத் தரையில் நிமிர்த்தி வைத்தான். அதன் பூட்டுப் பகுதியை தன் துப்பாக்கியால் குறி பார்த்தான்.

மறைவில் நின்றிருந்த தியாகுவும், முருகு பாண்டியனும் தங்கள் விரல்களை ரிவால்வரின் விசைக் குதிரையில் வைத்தார்கள்.

"ரெடி... கமான்... ஷூட்!"

இருவரும் சுட்டார்கள்.

அதனால் சுதாரித்த ஆகாஷ் என்ன நடக்கிறதென்று புரியாமல் ஒரு வினாடி விழித்தான். பதறினான்.

அடுத்த வினாடி அந்த சூட்கேசோடு சவுக்குத் தோப்பின் இருட்டுப் பகுதிக்குள் பாய்ந்து ஓடத் துவங்கினான்.

வெளியே துப்பாக்கிச் சத்தம் கேட்டு வண்டிக்குள் இருந்த பாண்டியனும், விஷாலும் மிரண்டு போயிருக்க...

கீழே விழுந்து கிடந்த கஜாவை முருகு

பாண்டியன் மடக்கி அவன் கையைப் பின்புறம் வைத்து விலங்கு போட்டார்.

ஆம்புலன்சுக்குள் தடதட வென்று ஏறிய தியாகு உள்ளே மஞ்சரியைத் தவிர இரண்டு பேர் இருப்பார்கள் என்று எதிர் பார்க்கவில்லை.

ஆனாலும் கையிலிருந்த ரிவால்வரை அவர்கள் நோக்கி நீட்ட, இருவரும் வெலவெலத்துக் கைகளை மேலே தூக்கினார்கள்.

தியாகு அவர்களைக் கீழே இறக்கி முருகு பாண்டியனிடம் ஒப்படைத்துவிட்டு விசிலை எடுத்து ஊதினார்.

ஒரு புறம் பதுங்கியிருந்த, மஃப்டியில் இருந்த போலீஸ்காரர்கள் இரண்டு அம்பாசிடர் கார்களில் வந்தார்கள்.

"முருகு. இவங்களை நான் பார்த்துக்கறேன். தப்பிச்சு ஓடினவனைப் பிடிக்க முடியுமான்னு பாருங்க. பெட்டியில வெறும் நியூஸ் பேப்பர் மட்டும் இருந்தாலும் அவனைப் பிடிச்சாகணுமே" என்றார் தியாகு.

"இல்ல சார். பெட்டிக்குள்ளே நிஜமா ஒரு கோடி இருக்கு" என்றான் குமரன்.

"என்ன சொல்றீங்க குமரன்?"

"ஆமாம் சார். எங்கப்பாவுக்கு விஷயம் தெரிஞ் சிருச்சி. அவர் 'உங்க திட்டத்துக்கு ஒத்துழைக்கலாம். அதே சமயம் ரிஸ்க் வேணாம்'னு ஒரு கோடி வைக்கச் சொன்னார்."

"என்ன குமரன்... இப்பப் பாருங்க... மஞ் சரியை மீட்டாச்சு. ஆனா பணத்தை விட்டுட்டமே... முருகு... பணமும் வேணும்; அவனும் வேணும்."

முருகு பாண்டியன் ஆகாஷ் ஓடிய திசையில் வேகமாக ஓடத் துவங்கினார்.

முக்கிய சாலையில் ஓர் ஒதுக்குப் புறத்தில் நிறுத்தி வைத்திருந்த சென்னை யிலிருந்து வாடகைக்கு எடுத்து வந்த வண்டி யில் கையில் சூட்கேசோடு ஓடி வந்து ஏறி னான் ஆகாஷ்.

வண்டியை ஸ்டார்ட் செய்தான். சென் னையை நோக்கிப் படு வேகத்தில் ஓட்டத் துவங்கினான்.

ஆஸ்பத்திரியில் சிகிச்சைக்குப் பிறகு மெதுவாகக் கண்களைத் திறந்தாள் மஞ்சரி.

அவளைச் சுற்றிலும் பரமேஸ்வர், குமரன், சிவா, அம்சா, பத்ரி, பூஜா எல் லோரும் நின்றிருந்தார்கள்.

"மஞ்சரி... ஒண்ணும் இல்லம்மா. உன்னைப் பத்திரமா மீட்டாச்சு" என்றான் சிவா.

அவள் உதடுகளில் இலேசான புன் னகை வந்தது.

ஆஸ்பத்திரி வாசலில் போலீஸ் ஜீப் வந்து நின்று, தியாகு இறங்கி உள்ளே வந்தார். அவர் கைகளில் சூட்கேஸ்.

"குமரன், தப்பிச்ச ஓடினவன் பேரு ஆகாஷ். பெங்களூராம்! அவன் நியமிச்ச ஆளுங்க சுஜா, பாண்டி, விஷால் இவங்க மூணு பேரும். ஆகாஷைத் துரத்திட்டுப் போன முருகு பாண்டியனுக்கும் அவனுக் கும் நடந்த கை கலப்புல பெட்டியால அவன் தாக்கியிருக்கிறான். பெட்டி இவர் கைக்கு வந்துடுச்சு. அவன் ஓடிட்டான்.



## அம்மாவின் கனவு!

லாரன்ஸ்... சரணின் 'முனி'யில் ஹீரோ கம் டைரக்டர். ஒரு நடனக் கலைஞராக தமது வாழ்க்கையைத் துவங்கியவர், இன்று தொட்டிருக்கும் உயரம் மிகப் பெரியது.

"ஒவ்வொரு தாயும் தன்னோட பிள்ளை எப்படி எப்படியெல்லாம் வர ணும்னு மனசுக்குள்ள துடிச்சிக்கிட்டிருக் காங்களோ அந்த மாதிரி என்னோட அம்மா, நான் ஒரு பெரிய டான்ஸர் ஆகணும்னு ஆசைப்பட்டாங்க. அதை அடிப்படையா வெச்சு நான் நடிச்சு இயக்கின படம்தான் தெலுங்குல சூப்பர் டூப்பர் ஹிட்டாகி இப்போ பொங் கலுக்குத் தமிழ்ல ரிலீஸ் ஆகப் போற 'லட்சியம்...' இது எங்கம்மாவின் கனவு" என்கிறார் லாரன்ஸ். "ரொம்ப நாள் இடைவெளிக்குப் பிறகு தமிழ் சினிமா பக்கம் வர்றது ரொம்ப சந்தோஷமா இருக்கு. ரஜினி ரசிகரா நடிக்கிறேன். பிரபுதேவா சாரும் என்னோடு இணைஞ்சு மிரட்டியிருக்காரு என்று உருகும் லாரன்ஸ் 'முனி'யிலும் சாமியாடியிருக்கிறாராம்.

லோ... இதோ நீங்க கொடுத்த பெட்டி... அவன் திறக்கக்கூட இல்ல" என்றார்.

"ரொம்ப தேங்ஸ் சார்" என்றான் குமரன்.

பூஜா ஏதோ சொல்ல வாயெடுக்க, அவளை ரகசியமாகக் கையமர்த்தி அடக்கினான்.

"சார்" என்றழைத்த பரமேஸ்வர், "எனக்கு உங்க மேல நம்பிக்கை இல்லாமதான் பெட்டியில பணத்தை வைக்கச் சொன்னேன். ஸாரி சார்" என்றார்.

"பரவால்ல. உங்க நிலைல யாரும் அப்படித்தான் செய்வாங்க. நான் காரணமாதான் நம்பர் லாக் உள்ள பெட்டி கேட்டேன். நான் எதிர்பார்த்த மாதிரியே அதைச் கட்டுத் திறக்க நினைச்சான். அந்த ஒரு விநாடி அவன் கவனம் திசை திரும்பினது எங்களுக்குப் போதுமானதா இருந்தது."

"கிரேட் ஜாப் சார்" என்றான் குமரன்.

"அந்த ஆகாஷைப் பிடிச்சப்புறம் சொல்லுங்க. அந்த கஜாவை இன்னும் விசாரிக்கணும். வர்றேன்..." என்று நகர்ந்தவர் திரும்பி வந்து, "குமரன்... உங்களுக்கு ஆகாஷ்னு யாராவது தெரியுமா? எதுக்காவது எப்பவாவது உரசியிருக்காங்களா?" என்றார்.

குமரன் படுக்கையில் இருக்கும் மஞ்சரியையும், பதற்றத்தில் இருக்கும் பூஜாவையும் பார்த்தான்.

"இல்ல சார். தெரியலை" என்றான்.

அவர் போனதும் பரமேஸ்வர், "சரி... எல்லாரும் போலாம். என் மருமக நல்லா ரெஸ்ட் எடுக்கட்டும். காலைல முகூர்த்தத்துக்கு இங்கிருந்தே கூட்டிட்டுப் போய் டலாம்" என்றார்.

எல்லோரும் புறப்பட்டார் கள்.

பூஜாவைத் தனியாக அழைத்த குமரன், "எல்லாருக்கும் முன்னாடி ஆகாஷ் யாருன்னு சொன்னா நீ யாருன்னு சொல்லணும். இப்பதான் ஒரு அதிர்ச்சிலேர்ந்து மஞ்சரி வெளில வந்திருக்கா. அவளுக்கு மறுபடி அதிர்ச்சி கொடுக்க வேணாம்னு நினைச்சேன். அதனாலதான் ஆகாஷைத் தெரியாதுன்னு சொன்னேன். தப்பா, பூஜா?" என்றான்.

"இல்ல குமரன்; உங்க வாழ்க்கையில என்னால எவ்வளவு பிரச்னைன்னு நினைச்சா கஷ்டமா இருக்கு."

"விடு. சரியாப் போச்சு" என்றான் குமரன்.

**ம**றுநாள். திருமண மண்

டபம் நிறைந்திருந்தது. மேளம் முழங்கியது. பட்டுப் புடைவைகளும், வைர நகைகளும் நடமாடின.

முதல் நாளிரவு இத்தனைச் சம்பவங்கள் நிகழ்ந்தது ஏதும் அறியாத இஷ்டமித்ர பந்துக்கள், குமரன் மஞ்சரி கழுத்தில் தாலி கட்டும்போது சிரித்தபடி அட்சதை தூவினார்கள்.

"அப்பாடா... இந்தக் கல்யாணம் நடக்குமா, நடக்காதான்னு எனக்குப் பதற்றமாத்தான் இருந்துச்சு" என்றான் சிவா அம்சாவிடம்.

"எனக்கும்தான்" என்றான் பத்ரி.

பரிசளித்து வாழ்த்துச் சொல்லிச் சாப்பிட்டு விட்டுப் புறப்பட்டாள் பூஜா. குமரன் அருகில் சென்று காதருகில் சொன்னாள்.

"குமரன்.. அந்தப் பொறுக்கி ஆகாஷ் மூலமா இனி எப்பவும் உங்களுக்கு எந்தத் தொந்தரவும் இருக்காது."

"எப்படிச் சொல்றே?"

"ஒரு நம்பிக்கைதான்" என்று நகர்ந்தாள்.

இரண்டு நாட்கள் கழித்துக் குமரனைத் தேடி வந்தார், தியாகு.

"குமரன்.. சுஜா சொன்ன தகவல்களை வெச்சு பெங்களூர்ல அந்த ஆகாஷ் வீட்டைத் தவிர ரகசியமா தங்கற ஒரு கெஸ்ட் ஹவுசுக்குத் தேடிப் போனோம். அங்க அவன் கத்தியால குத்தப்பட்டு செத்துக்கிடந்தான். பெங்களூர் போலீஸ் கேசைப் பதிவு செஞ்சு விசாரிக்க ஆரம்பிச்சிட்டாங்க. யாரோ ஒரு பொண்ணு வந்துட்டுப் போனதா சொல்றாங்க. யாருன்னு தெரியலை" என்றார்.



குமரனுக்கு நெஞ்சை அடைத்தது. கல்யாண வீட்டில் புறப்படும்போது பூஜா சொல்லிவிட்டுப் போனது நினைவுக்கு வந்தது.

*அவள்தானா? அவள்தானா?*

தியாகு சென்றதும் பூஜாவைச் சேர்த்து விட்ட ஹாஸ்டலுக்கு போன் செய்தான். காலி செய்துவிட்டதாகச் சொன்னார்கள். அலுவலகத்திலும் அதே பதில்! அவளுடைய செல்போனைத் தொடர்பு கொண்ட போது, என் உபயோகத்தில் இல்லை என்று பதில் வந்தது.

*பூஜா! பூஜாவா? இப்போது எங்கே?*

வாரணாசி செல்லும் அந்த ரயிலில் இரண்டாம் வகுப்புப் பெட்டியில் ஜன்னலோரம் அமர்ந்திருந்த பூஜாவின் கண்களிலிருந்து கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது.

வெளியே காட்சிகள் ஓடிக் கொண்டிருந்தன.

ரயில் நிதானமான ஓட்டத்தில் இருந்தது.

பக்கத்து இருக்கையில் இருந்த அம்மணி கேட்டாள்.

"எங்கம்மா போறீங்க?"

"ம்?" என்றாள் பூஜா.

"காசிக்கா போறீங்க?"

"ம்" என்றாள் பூஜா.

(முற்றும்)

## குஷியான படம்

"எத்தனையோ பேர் காதலைப் பத்தி படமெடுத்திருக்காங்க. ஆனா இப்படியொரு குஷியான படத்தைக் கொடுத்திருப்பாங்களான்னு தெரியலை" என்கிறார்கள் ஹரிசரண், நியூட்டன் இருவரும். 'தூவானம்' படத்தின் இயக்குநர்கள்.

"மழை நின்ன பிறகும் தூவானம் நிக்காது. அந்த அனுபவத்தை உணர்ந்தாத்தான் அதோட மகத்துவம் புரியும். காதலும் கிட்டத்தட்ட அப்படித்தான். காதலிக்காக கஷ்டத்தை ஏத்துக்கிட்டு வாழற ஒருத்தனோட கதை. ரொம்ப ரொம்ப ஜாலியான படமா இது இருக்கும்" என்கின்றனர் இருவரும்.

புதுமுகங்களான ஆதித்யா, நேத்ரா இருவரும் காதலர்களாக நடிக்க, மது அம்பட் ஒளிப்பதிவு செய்கிறார். ஐசக் தாமஸ் இசைக்கு நா.முத்துக்குமார் வரிகள் அமைத்திருக்கிறார். குஷியான ஸ்பாட்டுகளாகத் தேடித் தேடிப் படப் பிடிப்பை நடத்தி வருகிறதாம் தூவானம் டீம்.

- அருமைநாதன்

# அகஸ்தியன்

# எலி வேட்டை!

இரவு மணி பன்னிரண்டு இருக்கும். ஏழு ஸ்வரங்களையும் தாண்டி (என் அருமை மனைவி கமலா புதிதாகக் கண்டு பிடித்திருந்த) எட்டாவது ஸ்வரத்தில் அவள் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டு இருந்தாள்! எனக்குத் தூக்கம் வரவில்லை. அதற்குக் காரணம் முன்நாள் அவளுடைய அருமைத் தம்பி தொச்சு, "அத்திம்பேர், டூ தௌஸண்ட் லோன் வேண்டும்" என்று கேட்டிருந்தான். அவன் இங்கிலீஷில் பேசினால் கடன் கேட்கப் போகிறான் என்று அர்த்தம்! அவனிட மிருந்து எப்படித் தப்பிப்பது என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்த போது – சமையலறையிலிருந்து 'டமால்' என்று ஓசை. ஏதோ ஒரு பாத்திரம் விழுந்து உருண்டோடிய ஓசை.

கமலா சட்டென்று விழித்துக் கொண்டு, "என்ன... சமையலறையில் நீங்க ஏதாவது பூனைக் காரியம் செய்தீங்களா?" என்று கேட்டாள்.

"பூனைக் காரியமும் இல்லை; பானைக் காரியமும் இல்லை. சமையலறையில் ஏதோ பாத்திரம் விழுந்திருக்குது" என்றேன்.

"பாத்திரம் எப்படித் தானாக விழும்? எலியாகத்தான் இருக்கும்... முதலில் சமையலறைக் கதவை இழுத்து மூடிவிட்டு வாங்கோ" என்றாள்.

"அப்படியே ஆகட்டும்" என்று சொல்லிவிட்டு மூடிவிட்டு வந்தேன். மீண்டும் ஒரு மணி நேரத்துக்குப் பிறகு மற்றொரு பாத்திரம் விழுந்த ஓசை.

"நாசமாகப் போகிற எலி. ஜன்னல் வழியாக ஓடிப் போகாமல் பிராணனை வாங்கறது. முதலில் எலியை விரட்டப் பாருங்கோ... போன வருஷம் எலி வந்ததே, அப்ப என்ன ஆச்சுன்னு ஞாபகம் இருக்கா?" என்று கேட்டாள்.

"சரிதான். பொங்கலுக்குப் பட்டுப்



புடைவை வேண்டும்னு நீ நேத்து கேட்டதே மறந்து போயிட்டுது. போன வருஷம் எலி வந்து விழுந்ததா எனக்கு ஞாபகம் இருக்கப் போகிறது!"

"ஆமாம்... எப்படி ஞாபகம் இருக்கும்னேன். அந்த எலி, உங்கம்மாவின் பட்டுப் புடைவையை ரிப்பனாகக் கடித்துக் குதறிப் போட்டதும், என்னவோ நான் வளர்த்த எலிதான் புடைவையைப் பாழ் பண்ணிவிட்ட மாதிரி, உங்கம்மா வாய்க்கு வந்த வசவுகளாலும், ஏன் வாய்க்கு வராத வசவுகளாலும் எனக்கு அர்ச்சனை பண்ணினாளே அது எப்படி உங்களுக்கு ஞாபகம் இருக்கும்?"

விளம்பர இடைவேளைக்கு நிறுத்துவது மாதிரி அவள் பேச்சை (ஏச்சை?) நிறுத்த -

அப்போது மற்றொரு (கதா!)பாத்திரம் விழுந்து ஓசைப்படுத்தியது!

"பாத்தீங்களா? எலி பண்ற பாட்டை. பாத்திரம் எல்லாம் பாழ். முதல்லே போய் எலிப் பொறி வாங்கிண்டு வாங்கோ" என்றாள்.



"கமலா - இப்பவே போய் எலிப்பொறி வாங்கிண்டு வந்துடுவேன். 24 மணி நேர எலிப்பொறி ஷாப் இருக்கா என்று தெரியவில்லையே!" என்றேன்.

பொறி பறந்தது, கமலாவின் கண்களில். "விடிஞ்சு பிறகு பார்த்துக் கொள்ளலாம்" என்றாள் சாந்தமாக! அளவுக்கு மிஞ்சினால் கோபமும் பாசமாகிவிடுமோ.

"பாத்து நல்ல எலிப்பொறியாக வாங்கிக்கொண்டு வாங்க" என்று கமலா சொன்னாள்.

எலிப்பொறி எங்கு கிடைக்கும் என்பது தெரியாததால் பல கடைகளில் ஏறி இறங்கினேன்.

ஒருவாறாக ஒரு எலிப்பொறியை அதன் மூடி, கம்பிகள் பொருத்தப்பட்டுள்ள இடம், நீளம், அகலம் ஆகியவை வாஸ்து பிரகாரம் உள்ளனவா என்று சரி பார்த்து வாங்கி வந்தேன். (ஒன்றுமில்லை. கமலாவுக்கு) வாஸ்து பித்து. தும்ம வேண்டுமானால்கூட, வாஸ்துவை அனுசரித்து வடகிழக்கு மூலையைப் பார்த்துதான் தும்முவாள்!)

எலிப்பொறியைப் பார்த்ததும் அப்போதே எலி பிடிபட்டதைப்போல் கமலாவுக்கு 'குஷி' ஏற்பட்டது!

"இப்பவே போய் போளி பண்றேன்" என்றாள்.

"என்ன கமலா, எலிப்பொறி வாங்கினதுக்காக ஸ்வீட் பண்ணிக் கொண்டாடணுமா?"

"உங்க உளறலுக்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டிருக்க எனக்கு நேரம் இல்லை" என்று சொல்லிவிட்டு, போளி தயாரிப்பில் இறங்கினாள்.

அன்று இரவு, போளித்துண்டை எலிப்பொறியில் வைத்துவிட்டு கமலா படுத்துத் தூங்கிவிட்டாள். எலிக்குத் தொந்தரவாக இருக்கும் என்றோ

என்னவோ அவள் குறட்டையும் விடவில்லை!

அந்த சமயத்தில் தெருவில் ஓனிக்ஸ் குப்பை லாரி போக, எங்கள் ஃப்ளாட் வெடவெட என்று நடுங்கியது. அடுத்த கணமே , 'டமால்' என்று எலிப்பொறியின் கதவு மூடும் ஓசை கேட்டது.

கமலா சட்டென்று விழித்து எழுந்து, "எலி விழுந்துவிட்டது" என்றாள் - ஏதோ லாட்டரியில் பரிசு விழுந்துவிட்ட மாதிரி.

கிச்சனுக்குள் போய்ப் பார்த்தாள். பொறியில் எலி இல்லை!

''எலி இல்லையே... ஆச்சரியமா இருக்கே!'' என்றாள்.

''கமலா... லாரி போனப்போ வீடு குலுங்கியது. மூடி தானாக மூடிக் கொண்டது...

"இருக்கும்... சரி, இதுக்கு ஒரு வழி சொல்லுங்கோ."

---

''உனக்கு மட்டும் தண்ணிக் கஷ்டம் ஏன் இல்லேங்கற காரணம் இப்பத் தெரிஞ்சுடுத்து...''

**- கூடி ராஜகோபால்**

---

"ஓனிக்ஸ் குப்பை லாரி வராத இடத்தில் ஃப்ளாட் வாங்கிக் குடிபோய் விடலாம்..." என்றேன்.

கமலா லேசர் பார்வையை வீச, நான் அம்பேல் ஆனேன்!

**ம**றுநாள் மசால் வடை செய்து வைத்தாள். அன்றும் எலி விழவில்லை.

மறுநாள் தோசை வைத்தாள். பலனில்லை.

மறுநாள் அதிரசம் செய்து வைத்தாள். பலனில்லை.

'எலிக்கு டயபடீஸோ என்னவோ...' என்று நினைத்தேனே தவிர சொல்லவில்லை.

"சனியன் பிடிச்ச எலி. எப்படிப் பிடிக்கறதுன்னு தெரியலையே!" என்று கமலா அலுத்துக்கொண்டாள்.

''எலி பிடிக்க 'எலியவழி' என்று ஏதாவது புத்தகம் கிடைக்கிறதா என்று பார்க்கிறேன்' என்று சொல்ல நினைத்தேன். ஆனால் சொல்லவில்லை.

**அ**ன்று இரவு வழக்கம்போல் எலி ஓசை கேட்டதும், கமலா என்னை எழுப்பினாள்.

"வாங்கோ. இன்னிக்கு என்ன ஆனாலும் சரி. சமையலறையைக் காலி பண்ணி, மேலே உள்ள பரணைக் காலி பண்ணி எலியைத் துரத்தாவிட்டால் என் காதை அறுத்துக் கொடுத்து விடுகிறேன்.

'வைரத் தோட்டோடுதானே?' என்று நினைத்து, வழக்கம்போல் கேட்கவில்லை! ஆனால், "கமலா, இந்த ராத்திரியிலயா?" என்று கெஞ்சலாகக் கேட்டேன்.

"சரி... நீங்க போய்த் தூங்குங்க. நான் எடுத்து வைக்கிறேன்'' எரிச்சலாகச் சொன்னாள்.

பாத்திர ஷெல்ஃபில் மேல் தட்டி லிருந்து எடுத்தாள். கைதவறி ஒரு பாத்திரம் கீழே விழுந்து மேடையின் கீழே இருந்த சிலிண்டரின் மேல் மோத -

திடீரென்று ஓர் எலி எங்கிருந்தோ வெளி வந்து, லாங் ஜம்ப், ஹை ஜம்ப், எல்லாவற்றையும் செய்து, ஒரே தாவாகத் தாவி ஜன்னல் வழியாக வெளியே ஓடியது.

எங்கள் வீட்டில் எலி மட்டுமல்ல; காற்றுகூட உள்ளே வர முடியாதபடி சமையலறை ஜன்னல்கள், வென்டிலேட்டர்கள் ஆகியவற்றைக் கமலா அடைத்துவிட்டாள்.

பழையபடி கமலா நிம்மதியாகத் தூங்க ஆரம்பித்தாள். எனக்குத்தான் தூக்கம் இல்லை. காரணம், கமலாவிடும் குறட்டையின் டெஸிபெல் இரண்டு மடங்கு அதிகமாகிவிட்டிருப்பதுதான்! ●





# டாக்டர். எல்.மஹாதேவன்

# ஆயுர்வேதத்தில் உடனடி நிவாரணம் உண்டா?

## (போட்டி முடிவுகள்)

**தன்வந்தரி டாலர் பரிசுப்போட்டி மூன்றில் மோரைக் கொண்டு செய்யக் கூடிய 'சிறந்த கை வைத்திய'க் குறிப்பு எழுதி முதல் பரிசு பெறும் வாசகர் அ.சா.குருசாமி, செவல்குளம்.**

மாதுளம் பிஞ்சை அரைத்து அதை மோரில் கலக்கி காலை, மாலை வேளை களில் பருகி வந்தால் மலச்சிக்கல் தீரும். தொடர்ந்து மூன்று நாட்கள் பருகி வர வேண்டும்.

குப்பைமேனி இலையைக் காய வைத்துப் பொடி செய்து புட்டியில் அடைத்து வைத்துக் கொள்ளவும். தின மும் அரை ஸ்பூன் தூளை மோரில் கலந்து பருகி வந்தால் அஜீரணம், வயிற்று வலி, வாயுத் தொல்லை ஆகியவை குணமாகும்.

**இரண்டாவது பரிசாக தேவமருந்து முதல் பாகம் புத்தகம் பரிசு பெறும் வாச கர் வி.என்.எஸ்.மணி, வத்தலக்குண்டு**

வெளியில் போய்ட்டு வீடு திரும்பி வந்த உடன் மோரில், கறிவேப் பிலை, உப்பு பெருங் காயம், போட்டு சாப்பிட்டால் அசதி இல்லா மல் உடம்பு கறுசுறுப்பாக இருக்கும்.

வயிறு சரி இல்லாமல் 2 தடவை மலம் போனால், வெந்தயத்தை வாயில் போட்டுக் கொண்டு மோர் சாப்பிட்டால் வயிறு சரி ஆகிவிடும்.

அஜீரணமாக இருந்தால் அஷ்ட சூரணத்தை 1 டம்ளர் சுடு நீரில் கரைத்துச் சாப்பிடவும். மலம் 2 தரம் போனால் மோரில் அஷ்ட சூரணம் போட்டு 2 வேளை குடித்தால் சரியாகிவிடும்.

வயிறு சரி இல்லை என்றால் 1 நாளைக்கு 3 வேளை மோர் சாதம் சாப்பிட்டால் குணமாகிவிடும்.

**பரிசுப் போட்டி நான்கில் டாக்டர் எல்.மஹாதேவனிடம் அசத்தலான கேள்வி கேட்டு முதல் பரிசாக தன்வந்தரி டாலர் பரிசு பெறும் வாசகி எஸ்.காயத்ரி, திருக்குறுங்குடி.**

கேள்வி : சிறிய உடல் உபாதைகளுக்கு அலோபதியைப் போல் ஆயுர்வேதத்தில் உடனடி நிவாரணம் கிடைப்பதில்லையே, ஏன்?

டாக்டர் பதில் : சிறிய உடல் உபாதை களுக்கு ஆயுர்வேதத்தில் மருந்துகள் உள்ளன. ஆனால் அவசர சிகிச்சை ஆயுர்



வேதத்தில் நவீன மருத்துவத்தைப் போல் வளம் பெறவில்லை. சில நோய்களுக்கு நவீன மருத்துவமே சிறந்தது. இதனை நாம் ஏற்றுக்கொள்வதற்கு எவ்விதத் தயக்கமோ, கூச்சமோ இல்லை.

**இரண்டாவது பரிசாக தேவ மருந்து முதல் பாகம் புத்தகம் பரிசு பெறும் வாசகி சியாமளா ஸ்வாமி நாதன், வள்ளக்கடவு**

கேள்வி : தங்களுடைய மருத்துவ சிகிச்சையில் மோர் அதிகமாகப் பரிந்துரைக்கப்படுகிறது. முழுமையான உணவான பால் முற்றிலும் தவிர்க்கச் சொல்வது ஏன்?

டாக்டர் பதில் : நாங்கள் பாலைத் தவிர்க்கச் சொல்வதில்லை. வாதபித்தங்கள் அதிகரித்து பசி நன்றாக இருக்கும் பொழுது பாலைச் சாப்பிடச் சொல்கிறோம். பல நோய்களுக்குப் பால் நல்ல மருந்தாகப் பயன்படுகிறது. கண்டங்கத்திரி போன்றவை சேர்த்துக் காய்ச்சிய பால் இருமலுக்குப் பயன்படுகிறது. தசமூலம் சேர்த்துக் காய்ச்சிய பால் கைகால் வலி தீர்க்க பயன்படுகிறது. பாலை தசமூலம் கொண்டு காய்ச்சித் தாரை செய்வதும் உண்டு. பாலும், நெய்யும் ஆயுர்வேதத்தில் பயன்படுத்தப்படுகின்றன. மோர் வயிற்று நோய்களுக்குச் சிறந்தது. பால் வயிற்று நோய்களுக்கு அதிகமாகக் கொடுப்பதில்லை. பால் குடித்து ஜீரணமாகாமல் போனால் கோரைக்கிழங்கு, சுக்கு போன்றவை சேர்த்துக் காய்ச்சிய பாலைக் கொடுப்பதுண்டு.

●









## தேவமருந்து 11

# உழைப்பு



* காத்துல பறக்கும்!

ஒய்வில்லாமல் உழைத்துக் கொண்டிருக்கும் சிலரிடம் எப்போது 'குஷி'யான மூடில் இருப்பீர்கள் என்று கேட்டோம்...

# தானா வரும் குஷி!

கி.கருப்பையா *(ஹோட்டல் உரிமையாளர்):*

**இ**ந்தத் தொழில்ல பொறுமைதான் அவசியம்ங்க. நாமளே எரிச்சலும், பொறுமையில்லாமலும் இருந்தா ரொம்பக் கஷ்டமாயிடும். பசியில் சாப்பிட வருகிற ஒவ்வொரு கஸ்டமரும் ஒவ்வொரு மூடுல வருவாங்க. அப்படிப்பட்ட கஸ்டமரைப் பொறுமையா உபசரிக்கிறது முக்கியம். டிபனோ, சாப்பாடோ முடித்து கல்லாகிட்ட வரும்போது அவங்க முகத்துல தெரியற திருப்தியைப் பார்க்கிறப்ப எனக்கு வருகிற குஷியிருக்கே... அதுக்கு ஈடு இணையே கிடையாது.''



எஸ். கோபால் *(டர்னர்):*

**நா**ன் ஒன்பதாவதுதான் படிச்சிருக்கேன். ஆனா என்னோட புள்ளைங்க நல்லா படிக்கிறாங்க. ஓயாது வேலை செஞ்சு அலுத்துச் சலித்து வீட்டுக்குப் போவேன். அப்போ படிப்புப் பத்தி பசங்க பேசும்போது தானா ஒரு குஷி வரும் பாருங்க... அதுல என்னோட மொத்தக் களைப்பும் காத்துல பறந்துடும்ங்க. நமக்குக் கிடைக்காததை நம்ம குழந்தைகளுக்குத் தரத்தானே பாடுபடுகிறோம்.

* சேவை தொழில்!



**சண்முகநாதன்** *(ஐ.ஓ.சி. பணியாளர்):* காலையில வண்டிய எடுத்தா திரும்ப ராத்திரி ஆயிடுது. வண்டி மிதிக்கிற தெல்லாம் எதுக்காக? நம்ம வீடு நல்லா இருக்கணும்ங்கிறதுக்குத்தான். அதை நெனைச்சு வர்ற குஷிதான் வண்டிய கொஞ்சமாவது வேகமா மிதிக்க வைக்குது.






* ஈடு இணை இல்லை!

**எம். ஏழுமலை** *(சலவைக் கடைக்காரர்):* **யா**ரையும் ஏமாத்தாம, புண்படுத்தாம சம்பாதிக்கிற இந்தத் தொழிலை நான் ரொம்ப மதிக்கிறேன்! எல்லாத் தொழிலையும்விட நான் செய்யற தொழில் மத்தவங்களுக்குச் சேவை செய்யுற உயர்வான தொழில்ங்கற நினைப்புதான் எனக்குக் குஷி.

**- சிபிமனு**

*படங்கள்:* **பொள்ளாச்சி சுந்தரம்**

# வி வேக்

**குஷி தாண்டவமாடுகிறது விவேக் முகத்தில். சும்மாவா, ஹீரோவாகி விட்டாரே! நாம் அவரிடம் ரொம்பக் குஷியாகவும் கிண்டலாகவும் கேள்விகளைப் போட்டால், சளைக்காமல் படத்தில் கருத்து சொல்வதைப் போல் மூச்சு விடாமல் பதில் பேசுகிறார். முதல் கேள்வியிலேயே சீண்டிப் பார்த்தோம்...**



***இப்ப வர்ற படங்கள்ல உங்களை அதிகமாகக் காணோமே, என்னாச்சு?***

"புரளி செஞ்ச புண்ணியம்தான். 'நான் இனி ஹீரோதான், காமெடியன் இல்லே'னு யாரோ கிளப்பி விட்டுட்டாங்க." அப்படியே முட்டிக் காலைப் பதம் பார்த்த ஒரு விபத்தும் காரணம். 'சொல்லி அடிப்பேன்' பட ஷூட்டிங்ல திருச்சி மேம்பாலத்துல டு வீலர்ல வர்ற மாதிரி ஒரு சீன். திடீர்னு ரோட்ல இருந்த சரளைக் கல்லுல வண்டி மாட்டி தண்ணியில விழுந்துட்டேன். கூடியிருந்த மக்கள் 'ஆஹா விவேக் கோட ஆக்ஷன் காமெடி தான்'னு கை தட்டுறாங்க. அப்பத்தான் நெனச்சேன்; காமெடியனோட டிராஜடி கூட மக்களுக்கு காமெடின்னு. அந்த விபத்து தந்த பரிசு 'லிகமெண்ட்' (எலும்பு சவ்வு) அறுந்து போயி. ஆறு மாசம் பெட் பேஷன்ட் ஆயிட்டேன். அப்போ கண்ணுக்குத் தெரிஞ்சது ஃபேன் மட்டும்தான். ஃபேன்ஸ் இல்ல. அந்தச் சமயத்துல நெறைய வாய்ப்புகள் வந்தன. பயன்படுத்திக்க முடியாமல் போச்சு. உடனே வஞ்சனையில்லாம புரளியை, புழுதி மாதிரி கிளப்பி விட்டுட்டாங்க."

***மேடைகளில் வடிவேலுவை ரொம்ப கிண்டல் பண்றீங்களே... அவரைத்தான் போட்டியா நினைக்கிறீங்களா?***

''ஐயா, சும்பேர் பண்ணிப் பேசி, சுளே பரத்தை உண்டுபண்ணாதீங்க. அவரோட ஸ்டைல் வேற, என்னோட ஸ்டைல் வேற. காமெடியோடு கருத்தும் சொல்லணும், அதுதான் நம்ப பாணி. அதனாலதான் மக்கள் என்னைக் கருத்து கந்தசாமி ஆக்கினாங்க. சிரிப்புக்குள்ளும் சிந்தனை பொதிஞ்சிருக்கணும். இதுதான் என் இலக்கணம். இதைத்



தலைக்கனம் போட்டினு சொல்வீங்களா?"

**'சொல்லி அடிப்பேன்' ஹிட் ஆனா, தொடர்ந்து ஹீரோதானா...**

"ஹீரோவாகறது என் கையில் இல்லைங்க. என் ரசிகர்கள் கையில் இருக்கு. இந்தப் படம் ஹிட்டானா விவேக்கை ஹீரோவா ஒப்புக்கிட்டதாத்தானே அர்த்தம். எத்தனை நாளைக்குத்தான் ஹீரோ காதலுக்கு ஹெல்ப் பண்ணிக்கிட்டும், அவர் வில்லன் கூட சண்டை போடும்போது ஒளிஞ்சு பாத்துக்கிட்டும் இருக்கிறது? நானும் காதலிக்க வேண்டாமா? சுவரேறி, மரமேறி, மதில் ஏறி ஃபைட் பண்ண வேண்டாமா? அதுக்காக காமெடிக்கு முழுக்குப் போட்டுடவும் மாட்டேன்; ஹீரோதான்னு அடம் பிடிக்கவும் மாட்டேன்."

**'இரட்டை அர்த்த வசனங் கள், அடுத்தவரின் மனதை நோகடிக்கும் வார்த்தைகள் - இதுதான் தமிழ் சினிமாவின் காமெடின்னு ஆகிப்போச்சே...**

"ரொம்ப ஓவரா கவலைப்படாதீங்க. சார்லி சாப்ளின் காலத்துலகூட பக்கத்துல இருக்கிறவனை எட்டி உதைக்கிறதும், தள்ளி விடுற மாதிரியுமான காமெடி நெறைய இருந்திருக்கு. நாங்க முடிஞ்ச

# நானும் காதலிக்க வேண்டாமா?




அளவுக்கு அடுத்தவங்கள புண்படுத்தாத காமெடியைத்தான் செய்றோம். ஒருத்தர் உட்காரும்போது டைமிங்ல அவர் சேரை இழுத்து விடும்போது, அவர் கீழே விழுவது எல்லாருக்கும் காமெடிதான். அவர் கீழே விழறாரேன்னு காமெடி பண்ணாம இருக்க முடியாது. நல்ல காமெடி கதைக்களுக்காகவே ஓடிய படங்கள் நிறைய இருக்கு"

**'உங்க காமெடி பாமரர்கள் புரிஞ்சுக்கற மாதிரி இல்லையே'...**

"எல்லா விஷயங்களையும் சிம்பிளா சொல்ல முடியாதுங்க. அந்த மாதிரியான நகைச்சுவைகளைப் புரிந்து கொள்வது மாதிரி ரசனையை மேம்படுத்திக்கணும்."

**ஹீரோவா வெற்றி அடைஞ்சுட்டாரே வடிவேலு...**

"23-ம் புலிகேசி வெற்றி பெற்றதும் சந்தோஷப்பட்ட முதல் மனிதன் நான்தாங்க. வடிவேலு ஒரு கம்ப்ளீட் நடிகர். அவரை ஹீரோவா, காமெடியனா... எப்படி வேண்டுமானாலும் பயன்படுத்திக்கலாம். காமெடியன் ஹீரோவாக முடியும்னு நிரூபிச்ச வடிவேலுதான் எனக்கு வழிகாட்டி"

**உங்களைச் சின்னக் கலைவாணர்னு சொல்றது உங்களுக்கே கொஞ்சம் அதிகமாகத் தோணல...**

"ஐயா! சாமிகளா! இந்தப் பேரை நானா வச்சுக்கல... மக்களா வச்சது. முதன் முதலா டாக்டர் மாத்ருபூதம் அப்படிக் கூப்பிட்டாரு. அதை ஐயா சாலமன் பாப்பையா மதுரையில ஒரு கூட்டத்துல வழிமொழிஞ்சார். இந்த அடைமொழிக்கு நான் ஏற்றவனான்னு பலமுறை யோசிச்சிருக்கேன். 'அழகி' படத்துல அண்ணன் தங்கர் பச்சான் எனக்கு 'ஜனங்களின் கலைஞன்'னு பெயர் வைத்தார். நான் பட்டங்களுக்கு மயங்கிறவன் இல்ல."

**- மனோ. சௌந்தர்**

அட்டை, படங்கள்: **ஸ்ரீஹரி**

• படம்: பொள்ளாச்சி சுந்தரம்



# வட்டமேஜை

# மெய் சிலிர்த்தோம்!

**ஷே**க் சின்ன மௌலானாவைப் பற்றிய பசுமையான நினைவுகளைக்கூறிய எம்.காசிம், ஒரு நாதஸ்வரக் கலைஞன் எவ்வாறு உடல்நலம் பேண வேண்டு மென்று கூறியுள்ளது மிக அருமை!

**- இரா.சக்கரபாணி, மதுரை**

**சு**ஜாதாவின் எதிர்மறைகள் படித்து வியந்தேன். தமிழில் இவ்வளவு நல்ல சொற்கள் இருப்பதே பலருக்கும் தெரியாது.

**- ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்**

**அ**னுபவம் பகுதியில், வெளியாகியுள்ள ஜே.எஸ்.ராகவனின் மருத்துவமனை நினைவுகள் படிக்க சுவையாகவும் நகைச் சுவையாகவும் இருந்ததோடு மெய் சிலிர்க்கவும் வைத்தன.

**- கே.என்.பாலகிருஷ்ணன், பெங்களூர்**

**அ**மரர் கல்கியின் பெருமைக்கு மேலும் பெருமை சேர்க்கும் முகமாய் அமைந்திட்ட பொன்மயில் எனும் கவிதைப் பகுதி மிகவும் அருமை.

**- ஆர்.இராஜேஸ்வரி, திருச்சி**

**ஏ**து நல்ல அரசாங்கம் என்பதனையும், எப்படிப்பட்ட அரசியல் நாட்டிற்கு தேவை என்பதனையும் ராஜாஜியின் நினைவு நாள் வருமுன் நன்கு எடுத்துரைத்த விதம் அற்புதம்!

**- து.இராமகிருஷ்ணன், எரகுடி**

**'வெ**யில்' படம் 'தோல்வியின் வெற்றி' என்று வித்தியாசமாய் விமர்சனம் செய்துவிட்டு 'வாழ்த்துப்பா' என்றும் சொல்லியது அருமை.

**- மருங்கை துரைராஜ், அரியலூர்**

**வா**ட் வரி பற்றி சரியாகத் தெரியாமல் குழம்பிக் கொண்டிருக்கும் வியாபாரிகளுக்கு வாட்டுமா வாட் கட்டுரை தெளிவை ஏற்படுத்தியது.

**- பி.சிவா, பாளையங்கோட்டை**

**எ**ளிமையின் அவதாரம் இயேசு. என்றாலும் கிறிஸ்துமஸ் கொண்டாட்டம் ஒரு வர்த்தக நிகழ்வாகிவிட்டதென்னும் கிறிஸ்துமஸ் செய்தி மிகவும் வருத்தமடைய வைத்தது!

**- சாமி, திருவண்ணாமலை**

**'நா**ன்' என்பதற்கு மிக அருமையான விளக்கம் கொடுத்திருக்கிறார் சுவாமி சுத்தானந்தா. சிவசங்கரி வெகு அழகாக தமிழ் வடிவம் அளித்திருக்கிறார்.

**- ஜி.ஞானாம்பாள், மதுரை**





பாக்கியம் ராமசாமி

# அப்புசாமியும்

சீதாப் பிராட்டியைக் கவர்ந்த பொன்மான் மாதிரி பளபளவென்று மினுமினுவென்று மாபெரும் பேஸினில், "என்னைத் தொடு, என்னைத் தொடு! எடு! சுவை!" என்று அது மயக்கிக் கொண்டிருந்தது.

முதலில் அதை அலங்கரிக்கப்பட்ட தயிர் சாதம் என்று அசால்ட்டாக எண்ணி எல்லார் மாதிரி இரண்டு ஸ்பூன்தான் எடுத்துப் போட்டுக்கொண்டார் அப்புசாமி.

ஆனால் அது நாக்கை ஸ்பரிசித்ததும்தான் தெரிந்தது - அமிர்தம் என்பதை தேவர்கள் தயாரிப்பதில்லை; ரஷ்யாதான் தயாரிக்கிறது என்று. அள்ளி அள்ளிக் குமிச்சி ஒரு பிளேட் நிறையப் போட்டுக்கொண்டார். அட அட, என்ன சுவை...

அப்புசாமி அள்ளிப் போட்டுக் கொண்ட காட்சி, சீதாப் பாட்டியின் கண்ணுக்குத் தப்பவில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு சகித்துக் கொண்டாள். ஆனால் அவர், அந்த பிளேட் பூராவும் தின்று தீர்த்து விட்டு, வழித்தும், நக்கியும் விரல்களையும் ஸ்பூனையும் பேதம் காட்டாது சூப்பியும் ரசித்து ருசித்துத் தள்ளிவிட்டு, நைஸாக ஒரு காரியம் செய்தார். காலியான பேப்பர் கப் ஒன்றில் கப் நிறைய அள்ளி நிரப்பி ஜிப்பாவின் ஸைடு பாக்கெட்டில் திணித்துக் கொண்டார்.

யாரும் பார்க்கவில்லை என்று அப்புசாமி நினைத்துக் கொண்டாலும் இரு ஜோடிக் கண்கள் அவரது அசட்டுத்தனத்தைக் கவனித்துவிட்டன. சீதாப்பாட்டியுடையதும், பொன்னம்மா டேவிட்டுடையதும்தான்! பொன்னம்மா, சீதாப்பாட்டியின் பரம எதிரி. கணவர் டேவிட்டுடன் ஜோடிப் பொருத்த நிகழ்ச்சிக்கு வந்திருந்தாள்.

பொன்னம்மா டேவிட், அப்புசாமியின் 'அசட்டு அமுக்கலை'ப் பார்த்து விட்டாள் என்பதை சீதாப்பாட்டியும் கவனித்து விட்டாள்.

கணவர் மானத்தையும், தன் கௌரவத்தையும் பொன்னம்மா எப்படியும் வாங்கி அந்தக் கூட்டத்தில் விற்று விடுவாள் என்று சீதாப்பாட்டியினுள்ளேயிருந்த பட்சி கூவியது.

'கணவனின் ஜிப்பாப் பாக்கெட்டிலிருந்து ரஷ்யன் ஸாலட் பாக்கெட்டை எப்படியாவது அகற்றிவிட வேண்டும்'- சீதாப்பாட்டியின் மூளை, வாஷிங் மெஷினின் உச்ச கட்ட உலர்த்தல் வேகத்தில் வேலை செய்தது.

மீட்டிங் ஹாலுக்குக் கூட்டம் நகர்ந்தது.

அடுத்த ஷோ மாஜிக் ஷோ. புரொஃபசர் மன்னாவின் மாஜிக் துவங்க இன்னும் சில நிமிடங்கள் இருந்தன. ஷோ முடிந்ததும் பொன்னம்மா டேவிட் பேசுவதாக இருந்தது. துச்சாதனக்களை தாண்டவமாடியது. விஷமப் புன்னகையுடன், ''சீதா! மாஜிக் முடிந்ததும், ஒரு மாஜிக் காட்டப் போகிறேன். அவசியம் நீ இருக்க வேண்டும். எழுந்து ஓடி விடாதே'' என்றவள்,

பின்னர் ஏதோ நினைவு வந்தவளாக "எக்ஸ்க்யூஸ் மீ" என்று அவளிடமிருந்து விடுபட்டு, புரொஃபசர் மன்னா ஆயத்தம் செய்துகொண்டிருந்த



ஸ்டேஜுக்குச் சென்றான். "மிஸ்டர் புரொஃபசர்! கான் ஐ பி அஃப் எனி ஹெல்ப் டு யூ?" என்றான்.

சில நிமிடங்களில் புரொஃபசர் மன்னா, தனது மாமூலான அயிட்டங்களைச் செய்து காட்டினார். வளையங்கள் கோக்கும் அயிட்டத்தை சீதாப்பாட்டியின் நேயர் விருப்ப அயிட்டமாகச் சற்று விலாவாரியாகவே செய்தார்.

பிறகு, தொண்டையைச் செருமிக் கிருமி க்ளியர் செய்துகொண்டு, "நண்பர்களே, மேஜை மீது நான் பல பொருள்கள் வைத்திருக்கிறேன். ஆறு அயிட்டங்கள் வைத்துள்ளேன். ஒரு சிறிய ஃபிளவர் வாஸ், ஒரு டேபிள் வெயிட், நாக்கை ஊற வைக்கும் ஒரு கோப்பை ரஷ்யன் சாலட், முகம் பார்க்கும் கண்ணாடி ஒன்று, ரேஸர் ஒன்று, சமத்தான பாம்பு ஒன்று.

எல்லாரும் அவரவரது பாக்கெட்டுகளையும், லேடீஸ்கள் ஹாண்ட்பேக்குகளையும் இறுக மூடிக் கொள்ளுங்கள். இங்குள்ள ஆறு அயிட்டங்களில் எந்தப் பொருள் யாருடைய பாக்கெட்டுக்கு அல்லது ஹாண்ட்பாக்குக்குச் செல்லுமென்று சொல்ல முடியாது" என்று கூறிவிட்டு, மந்திரவாதிகளுக்கே உரிய ஒரு குட்டி மேஜையை மன்னா நகர்த்

# ரஷ்யன் சாலட்டும்!



தினார்.

சீதாப்பாட்டி அவரிடம், "உங்களுடைய அந்த 'செவன் ரிங்ஸ்' அயிட்டத்தை விட்டு விடாதீர்கள். என்னுடைய அடுத்த ரிக்வஸ்ட், "நீங்கள் எங்கள் பா.மு.கழகத்தில் அடுத்த வாரம் நடக்கும் வருடாந்தர விழாவில் கலந்துகொண்டு சிறப்பிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டாள்.

மேலும் ஒரு சில நிமிடங்கள் அவரிடம் சீதாப்பாட்டி பேசிக் கொண்டிருந்து விட்டு, ஸ்டேஜை விட்டு இறங்கித் தன் இருக்கையில் அமர்ந்துகொண்டாள். "வருகிறவர்களிடம் இப்படித் தனிப்பட்டுப் போய்ப் பேசினால்தான் இவள் தலைவி என்று எல்லாருக்கும் தெரியுமாக்கும்!" என்று பொன்னம்மா டேவிட் இப்படியும் அப்படியும் ஸ்டைலாக அசைந்தவாறு கையிலுள்ள மந்திரக்கோலை மேஜையைச் சுற்றித் தட்டினார்.

என்ன ஆச்சரியம்! மேஜை மேலிருந்த அத்தனை பொருள்களும் மாயமாய் மறைந்துவிட்டன.

பிறகு ஸ்டேஜின் முன் பகுதிக்கு வந்து, "தயவு செய்து என் பொருள்களைக் கவர்ந்துகொண்ட கள்ளக் கனவான்களை மேடைக்கு வருமாறு அழைக்கிறேன்" என்று அழைக்க யாரும், வரவில்லை.

புரஃபசர் மன்னா சிரித்தார். "நான் எதிர்பார்த்ததுதான். திருடினேன் என்று யார்தான் தானாக ஒப்புக் கொள்வார்கள்? ஆகவே நானாக அந்தக் களவான்களை - ஸாரி, கனவான்களை மேடைக்கு அழைக்கிறேன். தயவு செய்து மேடைக்கு வந்துவிடுங்கள். அவரவர் பையிலுள்ள பொருள்களை அவரவரே எடுத்து ஒப்படைத்து விடுங்கள்." ஆறு பேர்களைக் கும்பலிலிருந்து மேடைக்கு வரவழைத்தார்.

அப்புசாமியும் ஒருத்தர்.

"க்விக்."

அப்புசாமி தன் ஜிப்பாப் பையில் கைவிட்டார். சிரமப்பட்டு அவர் பதுக்கி வைத்த ரஷ்யன் சாலட் கோப்பையைத் தவிர எதுவுமில்லை. அதை வெளியே எடுக்கத் தயங்கினார்.

"ஜென்டில்மேன், நீங்கள் சிரமப்பட வேண்டாம்" என்று புரொஃபசர் மன்னா தானே அப்புசாமியின் ஜிப்பாவின் பக்க வாட்டுப் பாக்கெட்டில் கையை நுழைத்து அந்த ரஷ்யன் சாலட் கோப்பையை வெளியே எடுத்து மேஜை மீது வைத்துவிட்டார்.

"சபாஷ்! அவரவர் மனசுப்படி பொருள்கள் அவரவரை அடைந்திருக்கின்றன! இனிய மனத்தையுடைய இந்த ஜென்டில்மேனின் பையை இனிய ரஷ்யன் ஸாலட் அடைந்துள்ளது."

பொன்னம்மா டேவிட்டுக்குப் படு ஏமாற்றம். அப்புசாமி பதுக்கி வைத்த சாலட் கோப்பையைப் பகிரங்கப்படுத்தி அவரையும் அதன்மூலம் சீதாப்பாட்டியையும் அவமானப்படுத்த எண்ணியிருந்தவளின் மனக்கோட்டை தகர்ந்தது.

"மேடம்! தங்கள் பையிலுள்ள என் பொருளை இன்னும் தாங்கள் தர




"என் கேஸ் எப்ப முடியும் வக்கீல் சார்?"

"இது என்ன கேள்வி... வேற கேஸ் வந்தவுடன் முடிச்சுடுறேன்."

- ஆர்.ஆர்.பூபதி



"அப்பா உங்க கூட படிச்சவராம். தாடி மீசை யோட ஒருத்தர் உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்."

"என்கூட தாடி மீசை யோட யாருமே படிச்சது கிடையாதே."

- லலிதா செல்லப்பா

வில்லையே," என்று பொன்னம்மாளிடம் சென்றார். அவளும் மேடைக்கு அழைக் கப்பட்ட ஆறு பேரில் ஒருத்தர்.

'பொன்னம்மா தன் கைப்பையில், கையை நுழைத்தாள். அடுத்தகணம், 'ஆ! ஐயோ!' என்று அலறியவாறு பையைக் கீழே வீசி எறிந்தாள்!

புரொஃபசர் சிரித்தவாறு பாம்பை எடுத்துக் கூடையிலிட்டு மேஜை மீது வைத்தார்.

சீதாப்பாட்டி மேடைக்கு விரைந்து வந்து மைக்கைப் பிடித்து, "வொண்டர் ஃபுல் பெர்ஃபாமென்ஸ்! அவரவர் மன சுப்போல பொருள் அவரவர் பைக்கு வரும்' என்று புரொஃபசர் சொன்னது ரொம்பச் சரி. இந்தக் குறிப்பிட்ட நிகழ்ச்சி அவரது அயிட்டங்களில் சிகரம் என்று நினைக்கிறேன். ஆன் மை பிஹாஃப் புரொஃபசர் அவர்களுக்கு எனது ஹம் பிள் ப்ரசண்ட்டாக ரூபாய் தௌஸண்ட் அளிக்கிறேன். அதேசமயம் என் இனிய தோழி பொன்னம்மாவை ஒரு விஷயமாக வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். நிகழ்ச் சியில் அவர் ரொம்பப் பயந்துவிட்டார். எனவே, ராத்திரி நைட்மாரிஷாக ஏதாவது கனவு வராமலிருக்க, நிம்மதியாகத் தூங்க ஒரு காம்போஸோ, ரெஸ்ட்டிலோ, வாலியம் ஃபைவோ போட்டுக் கொண்டு படுக்கும்படி வேண்டிக் கொள் கிறேன்."

பொன்னம்மா கடுங்கோபத்துடன் வெளியேறினாள்.

அப்புசாமிக்கும் கோபம்தான். காலி யான தன் ஜிப்பாப் பையைத் தொட்டுப் பார்த்துக்கொண்டு புரொஃபசரைக் கோப மாக முறைத்தார். 'பாவி! அநியாயமாகக் கொள்ளை அடிச்சுட்டியேடா என் அமிர்தக் கோப்பையை! என்று அந்த முறைப்புக்கு அர்த்தம்.

சீதாப்பாட்டி சிரித்துக்கொண்டாள்.

"என்ன சார், மிஸ்டர் ரஷ்யன் சாலட்! கைக் கெட்டினது வாய்க் கெட்டாமல் போச்சாக்கும். டோன்ட் லூஸ் ஹார்ட். இனிமேல் திருடறதுக்கு முன்னே மெஜீஷியன் யாரும் இருக்காங்களான்னு பாத்துட்டுத் திருடுங்க!"

"மாஜிக்காரன்கூட இருக்கலாம். நீ இருக்கறயான்னு பாத்துக்கணும்டி கிழவி! அந்த மாஜிக்காரர்கிட்டே தனியாப் போய் ஏதோ பேசினப்பவே நினைச்சேன்! உன்னாலே அந்த மாதிரி ரஷ்யன் சாலட் பண்ண முடியுமா?" அப்புசாமி சவால் விட்டார்.

சீதாப்பாட்டி புருவங்களை நீவி விட்டுக்கொண்டாள்.

"இன்னாடி கியவி! ரோசிக்கிறயா? ரோசி! ரோசி!"

"நோ, நோ, நான் யோசிக்கிறது வேற விஷயம். உங்க மானம் போகக் கூடாதுன்னு உங்களைத் தடுத்தாட் கொண்ட விஷயமாக எனக்குத் தௌ ஸண்ட் ருபீஸ் லாஸ். அதை மாசா மாசம் ஐந்நூறு ரூபாயா உங்க மன்த்லி அலவன்சில் பிடிப்பதா, இல்லே ஹண்ட்ரட் ஹண்ட்ரடா பிடிக்கிற தான்னு யோசிக்கிறேன்!'' என்றாள் சீதாப்பாட்டி. ○

# மு. மேத்தா

**இந்த வருடம் தமிழ் மொழிக்கான சாகித்ய அகாதமி விருது 'ஆகாயத்தில் அடுத்த வீடு' என்ற கவிதை நூலுக்காக கவிஞர் மு.மேத்தாவுக்கு அளிக்கப்பட்டுள்ளது.**

"என்னுடைய எல்லாப் படைப்புகளிலும் நான் என் இதயத்தால், சாதாரண மக்களின் இதயங்களோடு பேசி இருக்கிறேன். என் எழுத்துகள் என் அறிவாற்றலை எடுத்துக் காட்டுவதற்காகவும், அறிவுஜீவி என்று நான் புகழப்பட வேண்டும் என்பதற்காகவும் எழுதப்பட்டவை அல்ல. சமூகத்தின் கொதிப்பை, கொந்தளிப்பை, மகிழ்ச்சியை, நெகிழ்ச்சியை, நான் எழுத்தில் எளிமையாக வெளிப்படுத்துகிறேன்.

'ஆகாயத்துக்கு அடுத்த வீடு நூலில், அது எழுதப்பட்டபோது நிலவிய இந்திய அரசியல் சூழல், இந்திய அரசியலில் நடந்த கோமாளித்தனங்கள், ஆகியவற்றைப் பற்றியெல்லாம் என் கவிதைகள் கவலையை வெளிப்படுத்தியுள்ளன. உதாரணமாக, தர்மபுரியிலே மூன்று மாணவிகள் உயிருடன் கொளுத்தப்பட்ட சம்பவம், மன்னிக்க முடியாத ஒன்று. அதையொட்டி 'உயிர் பாடும் ஒப்பாரி' என்ற தலைப்பில் நான் எழுதிய கவிதை இந்தத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளது. நெருப்பு வைத்தவனின் மனத்தில், தான் நெருப்பு வைத்தது தவறு என்ற எண்ண நெருப்பை ஏற்ற வேண்டும். சோகத்தில் மூழ்கியிருக்கும் அந்தத் தாயின் மனச்சுமைக்கு இலேசான ஓர் ஆறுதல் தேவை. இதுதான் என் கவிதையின் நோக்கம்!

உலக அரசியலில் 'ஈராக் அழிந்து, சிதைந்த பிறகுதான் தெரிந்தது பேரழிவு ஆயுதம் எவர் கையில் இருந்ததென்று' என்று என் மனக்கொதிப்பை வெளிப்படுத்தி இருக்கிறேன்" என்று கூறும் மு.மேத்தாவிடம், 'உங்களுக்கு இந்த விருது தாமதமாகக் கிடைத்ததாகக் கருதுகிறீர்களா?' என்றோம்.

"ஒரு படைப்பாளி எந்த ஒரு விருதையும் எதிர்பார்த்து எழுதுவதில்லை. இந்தச் சமூகத்தின் மீது கொண்ட அக்கறையினாலும், தன் எண்ணத்தை இந்தச் சமூகத்துடன் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்ற ஆசையினாலும் எழுதுகிறான். சில படைப்பாளிகளுக்குக் குறுகிய காலத்தில் சிறப்புகள் கிடைத்து விடுகின்றன. சிலருக்குக் கால தாமதமாகச் சிறப்புகள் கிடைக்கின்றன. இந்தத் தாமதமானவர்கள் வரிசையில் தமிழ் மக்கள் என்னையும் சேர்த்திருக்கிறார்கள்."

## நான் சுதந்திரமானவன்!

• படம் : ஸ்ரீஹரி

- எஸ்.சந்திரமௌலி

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.